# Short Stories from The Great Upanishads





உபநிஷதக் கதைகள்

by M. R. Jambunathan.

# உபநிஷதக் கதைகள்.

சென்னை மாஜி நீதிபதி
திவான் பஹதூர். வ. பாஷியம் அய்யங்கார்
அவர்களின் முகவுரையோடு

யோகாசனம், கடோபநிஷதம்
முதலிய நூல்களின் ஆசிரியரான
**எம். ஆர். ஜம்புநாதன்**
எழுதியது.



 வி. 1990. [விலை ரூ. **1—0—0**



# பொருளடக்கம்.

பக்கம்.

## கடோபநிஷதம்



## சாந்தோக்கியம்

---





சென்னை சட்ட இலாகா
மாஜி நீதிபதி திவான் பஹதூர்
வ. பாஷியம் அய்யங்கார் அவர்கள் எழுதிய

## முகவுரை.

நமது அநாதியான வேதத்தின் முடிவுரையென்றும் சிரஸ்ஸென்றும் பெயர் பெற்ற உபநிஷத்துக்களை கற்றுணர நம்மில் மிகச்சிலரே முயல்கின்றார்கள் என்பது மிகவும் விசனிக்கத் தக்க விஷயம். ஜகப் பிரஸித்தங்களான உபநிஷத்துக்களின் மேன்மையை இவ்விடத்தில் எடுத்துரைப்பது அநாவசியமென்று எண்ணுகிறேன். மனிதன் அவதரித்த நாள் முதல் சில முக்கியமான கேள்விகள் இருந்து வருகின்றன. யான் யார்? அதாவது என்னுடைய தத்வம் அல்லது உண்மை என்ன : யான் பிறந்து வளர்வது எதற்கு? மரிப்பதற்கு மாத்திரமா அல்லது எதையேனும் சாதிக்கவா? மரணம் என்பதின் அர்த்தம் என்ன? மரித்தபின் யான் இருப்பேனா? சுத்த நாசம்தானா; இருப்பேனாபின் என்னுடைய ஸ்திதி என்ன? நாசலேச மற்ற வாழ்வு உண்டா? உண்டானால் அதின் உண்மை என்ன? அதை அடையும் வழி எது? அதினுடைய பயன்தான் என்ன? இக்கேள்விகள் மனதில் கிளம்பாத விவேகியும் உண்டோ? இவ்விஷயங்களை விசாரிக்க வேண்டுமென்கிற நினைவேயன்றோ மனிதனுக்கும் மிருகாதிகளுக்கும் உள்ள பேதம். சகல மதங்களும் இவைகளைச் சுற்றியே அன்றோ உழல்கின்றன. இவ்வரிய பெரிய கேள்விகளைப் பற்றிய விசாரணைகளில் உபநிஷத்துக்களே முற்பட்டவைகள் என மேல்நாட்டார் உள்பட எல்லோராலும் ஒத்துக் கொள்ளப் பட்டிருக்கிறது. இவ் வுபநிஷத்

துக்களுக்குப் பிறகு அவைகளை அனுசரித்து அவைகளின் அர்த்தங்களை வற்புறுத்தி விஸ்தரிக்க அனேகக் கிரந்தங்கள் நம்முடைய சாஸ்திரங்களில் ஏற்பட்டிருக்கின்றன. எனினும் உபநிஷத்துக்களுக்குண்டான ஏற்றம் பிரத்யேகம்.

அவைகள் ஈசுவர சுவாசமன்றோ ? அவைகளை ஈசுவர நிச்வாசமென்று ஒத்துக் கொள்ளாதவர்களும் அவைகளின் இயல்பான தெளிவிலும் ஆழத்திலும் மூழ்கியே தீரவேண்டும். மகா பிரசித்தி பெற்ற மேல்நாட்டு ஆத்ம தத்துவ சாஸ்திரிகள் அனைவரும் அவைகளின் காம்பீரியத்தையும் மேன்மையையும் ஆனந்தகாத்தையும் ஸ்பஷ்டமாய் அங்கீகரித்திருக்கின்றனர். தவிர நாளுக்கு நாள் அபிவிருத்தி அடைந்து வரும் பிரத்யட்ச சாஸ்திரங்களுக்கு விரோதமான தத்துவோபந்யாசங்களை வெகுவாய் உடைய இதர மத கிரந்தங்கள் போலன்றி இவ்வுபநிஷதங்கள் நாளது வரையில் ஏற்பட்டிருக்கும் பிரத்யட்ச சாஸ்திர முடிவுகளுக்கும், இனி ஏற்படக் கூடிய முடிவுகளுக்கும் யாதொரு விரோதமில்லாமல் இருக்கின்றன. இதுவேயன்று. பிரத்யக்ஷ சாஸ்திரங்களின் நவீனத்தேர்ச்சிகள் போகிறவரையில் உபநிஷதார்த்தங்கள் மேன்மேலும் பலப்பட்டுக் கொண்டுவருகின்றன. விரிப்பது மிகை. ஆத்ம விசாரணையில் நுழைந்து ஆத்மாநந்தத்தை அடைய விரும்புவோர்க் கெல்லாம் உபநிஷத்துக்கள் இன்றியமையாதவை. அவைகளின் ஸ்வாரஸ்யம் அவைகளைப் பாநம் பண்ணுவதன்னியில் கிடைக்காது. ஆனால் கஷ்டம். அவை வரவரக் குன்றி வரும் நடமாட்டத்தை யுடைய ஸம்ஸ்கிருத பாஷையில் இருக்கின்றன. இப்பாஷையில் பயிற்சி இல்லாத தமிழரும் அவைகளின் தாத்பர்யார்த்தங்களை இழக்க வொண்ணுது என்று மிகத் தருமச் சிந்தனையால் அவைகளைத் தமிழாக்கவும் அவை

களின் விசேஷ பாகங்களை தமிழில் கதையாய் சுருக்கி எழுதவும் முன்வந்திருக்கும் இந்நூலாசிரியருக்கு தமிழரனைவரும் நன்றிபாராட்டக் கடமைப் பட்டிருக்கிறார்கள். இக்கதைகளில் சிலதை நான் படித்துப் பார்த்தேன். அதிலிருந்து அவைகளைக் கவனமாய் ஆய்ந்தோர்ந்தால் மிக்க பயன் விளையுமென்று சொல்லத் துணிகிறேன். சிறுவர்களுக்கும், பாலர்களுக்கும் கூட இவை மிக்கப் பிரயோசனப் படும்.

சென்னை. }
21-7-32 } வ. பாஷியம் அய்யங்கார்.

---

# முன்னுரை

இந்நூலிலுள்ள கதைகள் ஈசம், கேனம், கடம், முண்டகம், மாண்டுக்யம், ஐதரேயம், தைத்திரியம், பிரசினம், சாந்தோக்கியம், பிரகதாரண்ணியம் என்னும் பத்து முதன்மையான உபநிஷதங்களின் உண்மைகளாகும். இவ்வுண்மைகளை சிறியவர்கள், பெரியோர்கள் படித்தவர்கள், படிக்காதவர்கள், ஆண், பெண் முதலியவர்கள் சகல மதஸ்தினர்களும் சுலபமாய் அறிந்து கொள்வதற்காக இலகுவான நடையில் எழுதியுள்ளோம்.

உபநிஷதங்களைப் பற்றி நாம் அதிகமாய்ச் சொல்ல வேண்டுவதில்லை. அது பூமண்டலத்திலே புராதனமான நூலாகும். ஆனால் நவீன அறிஞர்களையும் பிரமிக்கச் செய்யும் நெஞ்சு திடுக்கிடும் உண்மைகள் நிறைந்த மொழிகள் என அறிஞர்கள் அறிந்த விஷயம்.

உபநிஷத உண்மைகளை அலெக்ஸாந்தர் அறிந்து, 'நான் உலகத்தை ஜயித்தேன். ஆனால் உபநிஷத உண்மைகள் என்னை ஜயித்து விட்டன'. இதை நமது நாட்டு ஜனங்கள் அறிய வேண்டுமென சில கிரேக்கர்களை ஆரிய நாட்டில் வாசஞ் செய்ய ஏற்பாடு செய்தார். அதற்குப் பிறகு ஸ்ரீ சங்கரர், இராமனுஜர் மாத்வர் தோன்றி பாரத தர்மத்தை புனர் உத்தாரணஞ் செய்தார், அப்பால் சுமார் 1656ம் வருடம் ஷாஜிஹானின் மூத்த மகனான டாராசகோவினால் அநேக உபசிஷதங்கள் பாரசிக பாஷையில் செய்யப்பட்டன. அப்பால் ஆன் கிவடில் துபரான் என்னும் பிரஞ்சுக்காரன்

பாரசிக பாஷையிலே இந்த அற்புதமான நூலைக்கண்டு 1775ம் வருஷத்தில் பிரஞ்சு பாஷையிலும் லத்தீன் பாஷையிலும் மொழி பெயர்த்தான். அந்த மொழி பெயர்ப்பைக் கண்டு ஸ்கோபனேஹர் ஆனந்தப்பரவசமாகி கூறுவதாவது:—

வேதங்களின் உண்மைகளை என்ன அற்புதமாய் சத்தியமாய் இந்த உபநிஷதங்கள் கர்ச்சனை செய்கின்றன. இதை ஊக்கமாய் ஒருவன் படித்தால், நிகரில்லாத இந்த நூலினால் ஆத்மாவின் ஆழமான நிலயம் வரை சென்று எங்கும் காணாத உணவைப் பெறுவான். இதன் நிலையான நினைவோடு குறிப்பான கருத்துடன் கலந்த இசைந்த எண்ணங்களின் அற்புதமே அற்புதம்! ஒவ்வொரு மொழியிலும் புனிதமான எண்ணம் புலனாகி வானமளாவும் பெருந்தோற்றத்தைக் காணலாம். நமது அறியாமைகளெல்லாம் உபநிஷத சோதியைக் கண்டு பறந்தோடும். உலகத்திலே உபநிஷதத்திற்கு நிகரான கல்வியே இல்லை. அதைவிட ஆதாயமளித்து எழுச்சியாக்கும் நூலை நான் கண்டதில்லை. எனது சிவனுக்கு அதுவே ஆதாரம். நான் இறந்தாலும் எனக்கு அதுவே ஆதரவளிக்கும். நமது தர்மம் ஒரு நாளும் அங்கு நிலைக்காது. இந்த புராதன அறிவை காலிலி சம்பவங்கள் புறக்கணிக்குமென்பது பகற் கனவாகும். ஆனால் இந்த அறிவு மறுபடியும் இங்கு பாயுமென்பதில் சந்தேகமில்லை. பிரஞ்சு நாட்டிலிருந்த ஜைகாலட் என்பவர் ‘நான் உபநிடத நாடகிய பாரத நாட்டில் ஏன் பிறக்கவில்லை’ என அடிக்கடி வருந்துவார். இச்சமயத்தில் பங்காளத்திலே ராஜா இராம மோகன ராயர் தோன்றி உபநிஷதப்பிரசாரம் செய்தார். அப்பால் ஸ்ரீ தயானந்த சரஸ்வதியும், இராம கிருஷ்ணபரமஹம்ஸரும் இவ்வுண்மைகளை மகா ஜனங்களுக்களித்தாகள்.

இங்ஙனம் பெருமை வாய்ந்துள்ள தத்துவங்கள் நிறைந்த இந்த உபநிஷத சாரத்தை இக்கதைகளில் காணலாம்.

இக்கதைகளால் புத்துணர்வு பெற்று நமது தமிழ் நாடு இன்னம் ஞான வீரத்தில் முன்னணி செல்ல வேண்டுமென எங்கு முள்ள பிரமத்தை நான் துதி செய்கிறேன்.

பம்பாய்
ஆங்கிரஸ வருஷம்
ஆடி மாதம்,
முதல் தினம்.

ம. ரா. ஜம்புநாதன்.

———

# உபநிஷதக் கதைகள்

## 1. காணாத குதிரை

ஆதி காலத்தில் மகரிஷி யொருவர் நான்கு வேதங்களை யும் நன்கறிந்திருந்தார். வேதத்திலே யுள்ள சதபத பிராம ணத்தை செம்மையாய் அறிவிப்பதில் அவருக்கு நிகரில்லை என மாணவர்கள் நினைத்து அவரையே சந்தேகங்கள் தெளிய அணுகுவது வழக்கம். ஒருதினம் மாணவன் ஒரு வன், அவரை அணுகி, 'பெரியாரே! அசுவமேதயாகத்தில் யக்ஞம் செய்யப்படும் குதிரையைப்பற்றி அறிவிக்க வேண்டு' மென வணங்கினான். அதற்கு அம்மகரிஷி அவனை நோக்கி 'நான் சொல்லும் குதிரையைக் கண்ணால் காண முடியாது. ஆனால் நான் சொல்வதை கவனித்தால் ஒருவேளை உன் மனத்திற்குப் புலனாகலாம்' எனச் சொல்லி "உஷாகாலமே அந்தக் குதிரையின் தலையாகும். சூரியன், காற்று, அனலே, அதன், கண், சுவாசம், திருவாயாகும். வருஷம் தேகமாகி, சுவர்கம், வானம், நிலம், திசை முறையே, முதுகு, வயிறு, மார்பு, பாகங்களாகும். அங்கங்கள் பருவங்களாகி பட்சங் களும் மாதங்களும் அதன் முட்டுக்களாகும். இரவு பகல் அதன் கால்களாகி, எலும்புகள் நட்சத்திரங்களாகும். மேகங் கள் மாமிசமாகி, மணல் அறை குறை சீரணமாய் அதனகத் திலுள்ள ஆகாரமாகும். மலை இருதயமாகி, செடி, கொடி ரோமங்களாகும். சூரியோதயம் குதிரையின் முன் பாக மாகும்; அஸ்தமோ அதன் பின்பாகமாகும். மின்னல் அதன் அசைவானல் இடிமுழக்கம் அதன் கால் உதையாகும். அதன்

சலமே நீராகும். ஆனால் மொழியோ அதன் மொழியே யாகும்.

இக் குதிரைக்கு இரவு பகல் என இரண்டு பக்கங்களுண்டு. அதுவே தேவர்களையும், கந்தர்வர்களையும், அசுரர்களையும் மனிதர்களையும் இழுத்துச் செல்லும். சமுத்திரமே அதன் பந்துவும் சன்ம நிலயமுமாகும்,'' என விடையளித்தார்.

மாணவன் அறிந்து வணங்கி நமஸ்கரித்து உண்மையான அசுவத்தை அறிந்து ஆனந்த இளைஞனானான். (பி. 1-1)

## 2. அசுவமேதம்

அசுவம் என்றால் பிரமத்திற்குப் பெயராகும். மேதமென்றால் காரியகாரணங்களை கனியச் செய்யும் செயலுக்குச் சொல்லவேண்டுமென அறிஞர் கூறுவது வழக்கம். மனிதனிறப்பது மறுசன்மத்திற்கே யாகும். மறுசன்மமென்பது இவன் எந்த சங்கற்பமுடன் நீங்குகிறானோ அதற்கேற்றவாறு வேறு ஜன்மத்தை அடைவான். அந்த சங்கற்ப சுபாவமுள்ளவனுக்கே யக்ஞ சிவன் எனப்பெயர். அப்படி மறு ஜன்மத்தை அடைவதற்காக இப்பொழுதிருக்கும் தேகம் வீங்கி மரிப்பான். அந்த மிருத்யுவான நிலைக்கு அசுவமெனப் பெயர். அந்திய செயல்களுக்கு அசுவமேதமெனப் பெயர். சூரியனுக்கும் அசுவமேத மெனப் பெயராகும். ஏனெனில் அவனே சிவராசிகளையெல்லாம் சிருட்டித்து அழிப்பான். இதற்கு அவன் ஆன்மாவான காலன் அவனுக்கு உதவி யளிப்பான். இச்செயல்களை யெல்லாம் குறிக்க வட மொழியில் அசுவமேதமென்பார்கள். அர்க்கனான அனலையும் அதன் செயலையும் அசுவமேதமெனச் சொல்வதுண்டு. ஏனெனில் அவனும்

இச்செயலேயே செய்கிறன். கடைசியில் உற்று நோக்கினல் சூரியனும் இவ்வனலும் ஒன்றே. அவனை யார் என மறுபடியும் நினைத்தால் மிருத்யுவெனவே தோன்றுவான். அதாவது அந்த காணுத பிரமம் மிருத்யு என்னும் தன் வன்மையால் சகத்திலுள்ளவைகளுக்கு செயல்களுக் கேற்றவாறு பயன்களை அனுபவிக்கச் செய்கிறன். இந்த மிருத்யு சம்பந்தமான இயல்பின் செயல்களுக்கே அசுவமேதமென உபநிஷதரிஷிகள் கூறுவார்கள். (பி. 1—2)

## 3. தூரன் கதை

தூரன் என்ருல் எனக்குப் புரியவில்லையென நீங்கள் அஞ்சவேண்டாம். எவனிடமிருந்து மிருத்யுவானவன் வெகு தூரத்திலுள்ளானே அவனுக்கு தூரன் எனப் பெயராகும். இந்த தூரன் என்னும் தேவதை ஒவ்வொரு மனிதனையும் பற்றியுள்ளான். இவன் மர்மமாய் நம்மிடம் வசிப்பதால் இவனை அறிவது கஷ்டம். நாம் எங்ஙனம் இவனை அறிய கஷ்டப்படுகிறேமோ அங்ஙனமே ஆதியில் தேவர்களும் அசுரர்களும் அவனை அறியக் கஷ்டப் பட்டார்கள். அவர்கள் கதையையே நான் இங்கு சொல்லுகிறேன்.

ஒரு சமயம் தூரனை எங்கு கண்டு பிடிப்பதென தேவர்கள் யோசனையிலானுர்கள். மொழியிலே அவன் மறைந்துள்ளான். அங்கு சென்று அவனைப் பார்க்கவும் என சில தேவர்கள் கூறினுர்கள். உடனே அவர்கள் மொழியிலே சாய்ந்தார்கள். தேவர்கள் தூரனைக் கண்டு பிடித்துவிட்டால் நம்மால் அவர்களை ஜயிப்பது கஷ்டம் என அசுரர்கள் எண்ணி, மொழியிலே அசுரர்களும் நுழைந்தார்கள். அங்கு நுழைந்து, பொய் மொழிகள் என்னும் பங்கத்தைப் புல

ளுக்கினர்கள். தேவர்கள் மொழிக்கு பங்கம் வந்துவிட்ட தென்பதை அறிந்து இவன் தாரன் இல்லை என உணர்ந்து மூக்கிலே சாய்ந்தார்கள். அசுரர்கள் அவனை அங்கும் எதிர்த்து கெட்ட கந்தத்தைப் புலனுக்கினர்கள். தேவர்கள் அப்பால், கண், காது மனத்திலே சரணகதியாகவே அசுரர் களும் அங்கு தோன்றி, கடுங் காட்சி, கடுஞ் சொல், கோர நினைவால் முறையே அவர்களைத் தகர்த்தார்கள். சரி, தாரனைச் சுவாசத்தில் காணலாம் என தேவர்கள் சுவாசத்தில் சரணகதி யானர்கள். அசுரர்கள் சுவாசத்தை எதிர்த்தார்கள். சுவா சத்தை எதிர்த்தவுடன் கல் சுவரில் எறியப் பட்ட மண் உருண்டைபோல் அசுரர் சிதறி அழிந்தார்கள்.

சுவாசத்தில் அசுரர்கள் ஒன்றுஞ் செய்ய முடியவில்லை. தேவர்கள் உடனே அசுரர்களாலும் பங்கஞ் செய்யப்படாத வன் சுவாசமே யாதலால், அவனே தாரனயிருக்க வேண்டு மென அறிந்து, அங்கு சரணகதி யடைந்ததினலேயே நாம் சாகவில்லை யாதலால், அவனே தாரனபிருக்க வேண்டுமென நன்றுய் உணர்ந்து சந்தோஷ மானர்கள். (பி. 1—3—19.)

## 4. சைகிதாயனர்

சைகிதாயனர் என்னும் ஒரு மகரிஷியை மாணவன் ஒருவன் அணுகி சுவாசம் நமது தேகத்திலுள்ள, நா, கண், செவி, நாசி, நினைவு முதலியவைகளுக்கு விடுதலை அளித்து எங்ஙனம் புனித மாக்குவான் என வணங்கினன்.

தேக மழியுங்கால் சுவாசம் நாவை அழைத்துச் சென்று அனலாக்கி சோதியாக்குவான். அப்படியே கண், செவி, நாசி, நினைவை அழைத்துச்சென்று சூரியன், வானம், வாயு சந்திரனுக்கி அவரவர் வேலைகளைச் செய்யச் சொல்லுவான்.

இவர்கள் தேகம் நீங்குவதே விடுதலையாகும். தங்களின் சுய வடிவரூபம் சேர்வதே புனிதநிலை அடைவதாகும்.

சுவாசத்தின் சிறப்பை நீங்கள் இன்னு மதிகமா யுரைக்கவும் என மாணவன் மறுபடியும் மகரிஷியை வணங்கினன். அதற்கு மகரிஷி பதிலளித்ததாவது—சுவாசமே நாம் புசிப்பது பருகுவதை அனுபவிப்பான். அவன் பெருமையுடனுல் நமது புலன்களும் பெருமையுடனகும். அவனுக்கே அங்கிரசன் பிரஹஸ்பதி உத்கீதன் எனப் பெயருண்டு. அவனை நீ அறிந்தால் அசத்தியத்தினின்று நீங்குவாய்.

(பி. 1—3—19.)

## 5. சிருட்டி கதை

ஆதியிலே ஆத்மா என்னும் ஒருவனே இருந்தான். தான்தனிமையா யிருப்பதைக்கண்டு சற்று பயந்தான். பயமென்பது அந்நியர்களால் ஏற்படுவதால் பயம் நமக்கு அவசியமில்லை என பிறகு அச்சம் நீங்கினன். ஆனல் அந்நியனில்லையேல் நமக்கு ஆனந்தமில்லை என்பதை எண்ணி தான் சிமிழின் இரு மூடிகளைப்போல் பிரிந்து ஆணும் பெண்ணுமானன். பிறகு பெண்ணுடன் சேர எண்ணியதும் என்னைச் சிருட்டித்து என்னையே அணுக விரும்புகிருனே என எண்ணிப் பெண் காணுமலாக விரும்பி பசுவானள். அவன் காளையானன். உடனே பசுக்கள் சிருட்டியாயிற்று. இங்ஙனமே உலகத்திலுள்ள எல்லா சீவராசிகளையுஞ் சிருட்டி செய்தான். பிறகு கைகளைத் தேய்த்து அனலை யாக்கி, வாயினல் ஊதி அக்கினி முதலியவைகளையும் அங்ஙனமே ஆகாராதிகளையும் செம்மையாக்கினன்.

அப்பால் தேவர்களும் மனிதர்களும் அவசிய மெனப்

புலனுக்கினுன். நான் ஒருவனிருந்து பயனென்ன என, க்ஷத்திரியனைப் புலனுக்கி வசு ருத்திரர்களேயும் செய்தான். பிறகு தர்மம் அவசியமென சகல பொருள்களேயும் சட்ட திட்டமுடன் செம்மையாக்கத் தர்மத்தைத்தோற்றுவித்தான். இதுதான் சிருட்டி கதை என் உபநிஷத ரிஷி யொருவர் சொல்வது வழக்கம். (பி. 1—4—14.)

## 6. உணவு இரகசியம்

வினு—உணவிலே எத்தனை வகை யுண்டு ?
விடை—எழு வகை யுண்டு.
வினு—எப்படி ?
விடை—ஒரு உணவு யாவற்றிற்கும் பொதுவாகும். அதுவே நாம் சாதாரணமாய் சகல சீவராசிகள் உண்ணும் உணவாகும்.

இரண்டு உணவு தேவர்களுக்குச் சொந்தமாகும். அவை யக்ஞத்திலே தேவர்களுக்கு அளிக்கும் பற்றற்ற தியாகமும் தட்சணையுமாகும்.

ஒரு உணவு எல்லா சீவர்களுக் குரியதாகும். மிருகங் களும் மனிதர்களும் பிறந்த சில காலம்வரை தாய்ப் பாலி லுலேயே சீவனுடனிருக்கும். இது ஒருவகை உணவு.
வினு.—மிகுதியான மூன்று உணவு எவை ?
விடை—இம் மூன்று உணவை ஆன்மா தனக்கே பயன் செய்துகொண்டது. இம்மூன்று உணவுகளுக்கும் மனம், மொழி, சுவாசமெனப் பெயராகும்.
வினு—ஆன்மாவிற்கு மனம், மொழி, சுவாசம், எப்படி உணவாகும் ?
விடை—என் மனம் இங்கு இல்லே. அதனுல் நான் பார்க்க வில்லே, செவியுறவில்லே, என ஜனங்கள் சொல்வது நீ

அறிந்தவிஷயம். ஏனெனில் மனஞ்சென்றால் புலன்கள் ஆதார மில்லாமலழிந்து விடும். அப்புலன்களை மனத்தின் அகத் துணவு என்பார்கள். மனத்தின் புறத்துணவை நோக்கவும். வானம் யஜுர்வேதம் பிதுருக்கள் தாய்மார்கள் அறியப்படும் பொருள்களை மனத்தின் புறத்துணவு என்பார்கள்.

மொழி என்பதும் ஒரு உணவாகும். இதுவும் அகத் துணவு புறத்துணவு என இருவகையாகும். மொழி என்பது தனிப்பொருள் ஒன்றுமில்லை. விருப்பம் பொருள்களின் முடிவையே மொழி எனலாம். இதுதான் அகத்துணவாகும். நிலம், ரிக்வேதம், தேவர், தந்தை, தாய், அறிவு முதலியவை களை புறமாக உள்ள மொழி உணவு என்பது.

சுவாசமான மூன்றாவது உணவை கவனிக்கவும். சுவா சத்தில் அகஉணவு புறஉணவு முண்டு. அதை அகச்சுவாசம் புறச்சுவாசமென்பார்கள். பிராணன், அபானன், வியா னன், உதானன், சமானன், என்பதே அகச்சுவாச மென்ப தாகும். சுவர்கம், சாமவேதம், மனிதர் குழந்தைகளே புறச் சுவாசமாகும்.

வினா—இந்த உணவுகளின் வடிவம் முதலியவைகளைப் பற்றிச் சுருக்கமாய்க் கூறவும்?

விடை—மொழிக்கு நிலம் தேகமாகும். சோதிவடிவமாகும். மொழி செல்லும்வரை நிலம் விரிந்து அனல் புலனுவான். மனதிற்கு வானமே தேகமாகும். சூரியனே அதன் வடிவமாகும். மனஞ் செல்லும்வரை வானம் விரிந்து சூரியன் மலர்வான். சுவாசத்திற்கு சலமே தேகமாகும். அவன் வடிவமோ சந்திரனுகும். சுவாசம் செல்லும்வரை சலத்தைக் காண்பான். சந்திரனும் அப்படியே விரிந்து புலனுவான்.

வினா—இந்த உணவை நன்ருய் அறிவதால் பயனென்ன?

விடை—இவைகளை நன்ருய் அறிந்தால், ஒருவன் தேகம்

நீங்கும்பொழுது, தன் மொழி, மனம், சுவாசவன்மையை மகனுக்களிப்பான். அதனால் தந்தை தன்னுடைய மிகுதியான செயல்களை மகன் பூர்த்தி செய்வதற்குச் சந்தர்ப்பமளிப்பான். இதனால் தந்தையும் நிலையுடனுவன்.

வினு—இம் மூன்று உணவிலே முதன்மையானவன் எவன்?

விடை:—இம் மூன்றில் முதன்மை யானவன் சுவாசமாகும். சுவாசமில்லையேல், மொழி, மனம், புலன்கள் ஒன்றுமே யில்லை. இதை நான் தூலமாகச் சொல்வதாவது— உலகத்தில் எது அழிந்தாலும் காற்றிற்கு அழிவில்லை. அஸ்தமாகாத உணவெனப்படும் காற்று தேவனே அழியாதவனாகும். அந்த நிலயத்திலேயே சூரியன் தோன்றி மறைகிறான். அவன் ஒருவனையே தேவர்கள் இன்றும் நாளையுமிருப்பதாக என்னுகிறார்கள்.

வினு—இந்த உணவை நான் எங்ஙனம் புசிப்பது?

விடை—நீ பிராணன் அபானன் வியானனென சுவாசங்களைப் பயிற்சி செய்யவும்.

வினு—பிராணனுக்கு வேறு பெயரென்ன?

விடை—அதற்கு அமுதன் எனப் பெயருமுண்டு. அதுதான் பெரிய உணவாகும். (பி. 1—5)

## 7. கர்வப் பிராமணன்

அஜாத சத்துரு என ஒரு அரசனிருந்தான். அவனை கார்கிய பாலகி என்னும் கர்வம் மிகுந்த பிராமணனொருவன் அணுகி பிரமத்தைப்பற்றி நான் சொல்லுகிறேன், கேட்கவும் என அடியிற் கண்டவாறு,—சூரியன், சந்திரன், மின்னல், ஆகாசம், காற்று, அனல், சலம், கண்ணாடி, ஓசை, திசை, நிழல், மனிதன் முதலியவர்களிலுள்ள புருஷனையே நான்

பிரமமாக உபாசனை செய்கிறேன், என ஒவ்வொன்றாய்க் கூறினன்.

அதற்கு அஜாத சத்துரு, பிராமணரே! நான் சூரியனில் அரசனையும், சந்திரனில் சோமனையும், மின்னலில் சோதியையும், ஆகாசத்தில் நிறைந்தவனையும், காற்றில் இந்திரனையும், அனலில் வன்மை புருஷனையும், சலத்தில் பிம்பத்தையும், கண்ணாடியில் பிரகாசத்தையும், மனித (ஓசையில்) உயிரையும், திசையில் அருகனையும், சாயையில் மிருத்யுவையும், மனிதனில் சாந்தத்தையே காண்பதால், அந்த உபாசனைகளால் அவையவைகளுக் கேற்பட்ட குணங்களைத் தவிர வேறு என்ன லாபத்தை நீ அடையலாம். அவைகளை பிரமமாக நீ எப்படி எண்ணுவாய்? இன்னு முரைக்கவும் என்றார்.

பிராமணன் மௌனமாகி, வெட்கமடைந்து தலை குனிந்து க்ஷத்திரியனை நமஸ்கரித்து சிடனானன்.

(பி. 2—1—14)

## 8. அஜாதசத்ரு கதை

அஜாதசத்துருவை ஒரு பிராமணன் அணுகி ஆத்ம ஞானத்தை எனக்கு அறிவிக்கவும் என வினவியவுடன், பிராமணனைத் தூங்கும் ஒரு மனிதரிடம் கூட்டிச்சென்றார். அரசர் அவனைச் சத்தமிட்டெழுப்பியும் அவன் எழுச்சியாகவில்லை. பிறகு அவனைப் பரிசித்து எழுப்பி பிராமணனை நோக்கி— இவன் தூங்குங்கால் ஆத்மா எங்கு சென்றிருந்தான்? அவன் இப்பொழுது எங்கிருந்து வந்தான்? என வினவினர்.

நான் அறியவில்லை எனப் பிராமணன் சொல்லி விட்டான்.

உடனே அஜாதசத்துரு சொல்லியதாவது—

அந்தராகாசத்திலே இந்த ஆன்மா பிராணனின் வழி யால் தன் விக்ஞானத்தை எல்லாம் தன்னகத்தில் லயஞ் செய்துவிட்ட நிலையையே நாம் தூக்கமெனச் சொல்வது. அப்பொழுது அவன் அனைத்தையும் தேகத்திலே மறைத் துள்ளான். ஒருவன் உலகமெல்லாம் படையெடுத்து அரச பதவியைப் பெற்றவுடன் ஆனந்தமாய் களைப்பாறுவதுபோல் ஆத்மாவானவன் ஆழ்ந்த நித்திரையிலே நாடிகள் வழியாய் தேகத்திலேயே களைப்பாறுகிறான்.

கனவிலுள்ள ஆன்மாவைப்பற்றி ஒரு மொழி சொல்லு கிறேன். ஒரு அரசனானவன் தன் நாட்டில் தலைவனாயிருந்து கொண்டு ஆனந்தத்தை அனுபவிப்பதுபோல் தனது தேகத்தி லேயே கனவு காணுங்கால் புலன்களில் ஆனந்தமாயுள்ளான்.

சிலந்தி தனது நூலுடன் தோன்றுவதுபோல் அல்லது நெருப்பிலிருந்து வரும் பொறிபோல் எல்லாம் அந்த ஆன் மாவினின்றே புலனாகும். அவ்வான்மாவை இரகசிய மொழி யால் மொழிந்தால் சத்தியத்தின் சத்தியமே எனச் சொல்ல வேண்டும்.

பிராமணன் இன்னம் விளக்கவேண்டு மென்ச்சொல்லி, இந்த ஆன்ம தேகத்தைப்பற்றி அதிகமாய்க் கூறவேண்டு மென்றான்.

பிராமணனே, இவ்வான்மா ஒரு இளங் குழந்தையாகும். அந்தர்சிவனையே இளங் குழந்தை எனச் சொல்வது. அவன் நிலயம் இத்தேகமாகும். தலையே அவன் குகையாகி, அவன் நிலை சுவாசமாகி, உணவே அதை இணைக்கும் கயிறு போலா கும். அவனுக்கு ஏழு உணவுண்டு.

வினா—அவன் எங்ஙனம் இந்த தேகத்திலுள்ளான் ?

விடை—ஒரு கிண்ணமுண்டு. அதன் வாய் கீழாகும். அடிப்

பாகமும் மேலேயுண்டு. நமது வாயும் கபாலமுமே அக்கின்னமாகும்.

வினு—அவனுக்கு உதவி எவரேனுமுண்டோ ?

விடை—புலன்களே அவனுக்குதவி அளித்து புகழ் அளிப்பவர்களாவார். இதைத் தவிர பல ரிஷிகள் அவ்வான்மாவிற்கு உதவியளிப்பார்கள். வலது செவி கௌதமர், இடது செவி பாரத்துவாஜராகும். வலது கண் விசுவாமித்திரர், இடது கண் ஜமதக்னி, வலது நாசி வசிஷ்டர், இடது நாசி காசியபர், நாக்கு அத்திரியாகும்.

வினு —கண்களில் யார்?

விடை —கண் சிகப்பில் ருத்திரனுண்டு. நீரில் பர்ஜன்யன் உள்ளான். கண்ணில் உள்ள குழந்தையிலே சூரியன் தொங்குகிறுன். இருள் பாகத்தில் அக்கினியாகும். வெள்ளை பாகத்தில் இந்திரன் சரணமடைந்துள்ளான். கீழ் இமை நிலமும் மேல் இமை சுவர்கமுமாகும்.

வினு—பிரமம் எத்தனை வகையாய்ப் புலனுகும் ?

விடை—வடிவம் வடிவமற்றது. சாகும் சாகாதது. திரமானது, நீர் தன்மையுமுண்டு ; சத்தாகும், தியவாகும்.

வினு—இந்த பேதா பேதங்களை நான் காணும் வகை எங்ஙனம் ?

விடை—காற்றையும் வானத்தையும் தவிர மற்றவைகள் எதற்கும் வடிவமுண்டு, சாவுண்டு, கனமுண்டு, நிலையுண்டு. வடிவ முதலியவைகளின் ரசமே சூரியவனுவன். அவனே சத்தின் (நிலைப் பொருள்களின்) சாரமாகும்.

காற்று, வானத்திற்கு வடிவில்லை, சாவில்லை, நீர் தன்மையுண்டு. ஆனல் நிலையில்லை. இதன் சாரமே சூரியனிலுள்ள புருஷனுகும். இது தேவாம்சமாகும்.

வினு—தேகத்திலே இப் பிரமத்தை எங்கு காண்பது ?

விடை—சுவாசம் அந்தராகாசத்தைத் தவிர மற்றவைகள் எல்லாம் வடிவமுடையது. நிரமுண்டு, மரணமுண்டு, நிலையு முண்டு. சத்தான இதன் சாரம் கண்களாகும்.

ஆனால் தேகத்தி னகத்தில் புலனாகும சுவாசமும் சிதா காசமும் வடிவ முதலியவைகளற்றன. நிலையற்ற தியத்தின் சாரத்தை வலது கண் புருஷனில் காணலாம்.

விஞ—அவனை இன்னும் எங்ஙன மறிவது?

விடை—சிடனே! அவன் நெருப்புப் பொறி சட்டென மின்னுவதுபோல் தோன்றுவான். அவனைப்பற்றி எத்தனை சொன்னபோதிலும் முடிவில்லை.

இதைவிட அதிகமில்லை என ஒருவன் சொன்னால் அது பிழை என உடனே அறிந்துகொள்ளவும். எத்தனை சொன்ன போதிலும் அது அதற்கு அதிகமாதலால்,

சொன்னதெல்லாம் இன்னும் அவனை அறிவிக்கவில்லை என்பதைத் தவிர வேறு அப்படி அவனைப்பற்றி இன்னம் அதிகம் சொல்வேன். இந்த பிரமமே சத்தியமாகும்.

(பி. 2—1—12)

## 8. யாஞவல்கியர்

யாஞவல்கியர் என ஒரு மகரிஷி இருந்தார். அவருக்கு மைத்திரேயி, காத்யாயனி என இரு மனைவிகளுண்டு. ஒரு நாள் மைத்திரேயியை அவர் பார்த்து இப் பொருள்களை நீங்கள் இருவரும் பிரித்துக் கொள்ளவும். நான் கானகஞ் செல்லுகிறேன் என்றார்.

மை—பெரியாரே! உலகெல்லாம் எனக்குச் சொந்த மானாலும் அதனால் நான் அமுத வாழ்க்கையை அடைவேனா?

யா—புவி, பொருளால் சுகத்தை அடைந்தபோதிலும், அமு

தத்தை அடைய இயலாது.

மை—பிறகு எனக்கு இவை ஏன் வேண்டும். அமுத வாழ்க்கையை அடைவ தெங்ஙனம்?

யா—நீ ஆன்மாவை அறியவேண்டும்.

மை—அதைச் சற்று அறிவிக்கவும்.

யா—புருஷனை நேசிப்பதற்காக புருஷன் பிரியமாவதில்லை. ஆன்மாவை நேசிப்பதற்காகவே புருஷன் பிரியமாவான். அப்படியே மனைவி, மகன், பொருள், பிராமணன், க்ஷத்திரியன், சகங்கள், தேவர்கள், சீவராசிகள் சகலத்தையும் நேசிப்பதற்காக அவைகள் பிரியமாவதில்லை. ஆன்மாவை நேசிக்க வேண்டுமெனவே அவைகள் பிரியமாகும். ஆகையால் இந்த ஆன்மாவை நீ கண்டு கேட்டு அறிந்து அநுபவமானுல் இவைகளும் நன்கு புலனுகும்.

மை—இந்த ஆன்மாவை நான் எங்கே பார்க்கலாம்?

யா—நீ அகத்திலேயே காணலாம். ஏதோ புறத்திலிருப்ப'தாக ஒருவன் எண்ணுவானேயானுல் அது அவனை புறத்தில் தள்ளிவிடும். பிராமணன், க்ஷத்திரியன் தேவன் எல்லாம் ஆன்மா வாயிருப்பதாக எண்ணவும்.

மை—நீர் புறத்தி லிருப்பதாக எண்ண வேண்டாமெனச் சொல்வது எனக்கு விளங்கவில்லையே?

யா—இதோ சில உதாரணங்களைச் சொல்லுகிறேன். டமார ஓசையைப் பற்ற வேண்டுமானுல் புறத்திலுள்ள ஓசையை பிடிக்காமல் டமாரத்தையே பிடிக்க முயலவேண்டும். அப்படியே சங்கநாதத்தைப்பற்ற சங்கையும், குழலோசையைப்பற்ற குழலையும் பற்றவேண்டும். அப்படியே ஆன்மாவை அறியவேண்டும்.

மை—பிறகு இப்புறப் பொருள்களெல்லாம் எவை?

யா—நெருப்பிலிருந்து புகை கிளம்புவதுபோல் அல்

வான்மாவி னிடமிருந்தே வேதம் முதலியவைகள எல்லாம் தோன்றிற்று.

எங்ஙனம் சலமெல்லாம் சமுத்திரத்தில், பரிசம் சர்மத்தில் உருசை நாக்கில், கந்தம் நாசியில், உணர்வு மனத்தில், அறிவு இருதயத்தில், செயல் கைகளில், அசைவு பாதத்தில், வேதம், மொழிகளில், முறையே சாய்வதுபோல எல்லாம் அவனிலே தோன்றி சாயும்.

மை—அதை நாம் எங்ஙனம் காண்பது ?

யா—அப்புடன் கலந்த உப்பை எடுக்கமுடியாது. ஆனால் சலத்திலே உப்பை நாம் ருசிக்கிறோம். அந்த உப்பின் அகம்புறத்தை நாம் காண கஷ்டமாவதுபோல், பிரமத்தையும் அகம்புறங் காண்பதரிது. உப்பை ருசியால்போல் அவன் அறிவால் உதயமாவான். ஆனால் அவன் சென்றுவிட்டால் விஞானமழிந்துவிடும்.

மை—அவன் சென்றான் என நீங்கள் சொல்வது எனக்கு கலக்கத்தை யளிக்கிறதே. விஞானமில்லையா ?

யா—நீ என் கலங்கவேண்டும். அன்னியப் பொருள் இருந்தாலல்லவா காண்பது கேட்பது முதலியவை புலனாகும். ஆனால் எல்லாம் ஆன்மாவாயிருக்குங்கால் எதைப்பார்ப்பான், கேட்பது முதலியவைகளைச் செய்வான். எவனால் இவை களை யெல்லாம் அறிகிறானோ அவனை எங்ஙனமறிவான் ? அறிஞனை அவனை எங்ஙனமறிவது ? நாம் எத்தனை சொன்ன போதிலும் அதற்கதிகமாய் அவனாவதால் அதற்கு முடிவில்லை எனச்சொல்லி,

மைத்திரேயியே! நீ ஒருவாறு உணர்ந்துவிட்டாய் எனக் கூறி யாக்ஞவல்லியர் கானகஞ் சென்றார். (பி. 2—4.)

## 9. மது வித்தை

புராதனத்தில் பெரிய அறிஞர் சபையொன்று கான கத்தில் கூடிற்று. அநாமதேயமான அநேக ரிஷிகள் அங்கு பிரசன்னமா யிருந்தார்கள். அப்பொழுது தத்யக ஆதர் வணன் இரண்டு அசுவினர்களுக்கும் மது வித்தை என ஒரு சிட்சையை அளித்தார். இந்த சிட்சையை அநாமதேய ரிஷிகள் செவியுற்று ஆகா! என்ன அற்புதம் பிரபஞ்சங்கள் எல்லாம் இந்த சிட்சையில் அடங்கிவிட்டன. சிருட்டியின் சூட்சமமும், சீவர்களின் வாழ்க்கையும், பிரபஞ்சத்திலுள்ள எல்லா நிலைகளையும் அது அறிவிக்கின்றதே ஆன்மாவின் அகண்ட சொருபத்தையும் அது தெளிவாய்க் காட்டு கின்றதே என அந்த சிட்சையை மானிடர்கள் கொள்ளை கொண்டு போகவேண்டுமென உபநிஷத மொழிகளாய் அருளினார்கள். அந்த உபநிஷதகதையே இது. மது என்றால் தேன், சிட்சை என்றால் அறிவாகும்.

இந்த புவி எல்லாப் பொருள்களின் தேனாகும். எல்லாப் பொருள்களும் புவியின் தேனாகும் புவியில் தேஜோமயமா யுள்ளவனும், தேகத்திலுள்ள தேஜோமயமான புருஷனும் தேனேயாகும். அவனே ஆன்மாவாகும், அமுதனாகும். பிரம மாகும். சகலமுமாகும்.

இங்ஙனம், இந்த சலம், அனல், காற்று, சூரியன், திசை, சந்திரன், மின்னல், இடிமுழக்கம், வானம், தர்மம் தனித் தனியே எல்லாப் பொருள்களின் தேனாகும், எல்லாப் பொருள்களும், சலம் முதலியவைகளை தனித்தனியாக எண்ணி அவைகளின் தேன் என எண்ணவேண்டும். அவை களில் தோன்றும் தேஜோமயமான புருஷர்களும் தேகத்திலே தோன்றும் சீவ முறையே ரேதஸன், மொழி, சுவாசம், கண், காது, மனம், சோதி, சப்தம், இருதயம், இயல்பாயுள்ள

வர்களும் தேன்களாகும். அவைகளிலுள்ள ஒவ்வொருவனும் ஆன்மாவைப் போலாகும். அவன் அமுதன், பிரமன், சகலு முமாகும்.

இந்த சத்தியம் எல்லாப் பொருள்களின் தேனுகும். எல்லாப் பொருள்களும் சத்தியத்தின் தேனுகும். சத்தியத்தில் தேஜோமயமாயுள்ள புருஷன், தேகத்தில் தேஜோமயமாயுள்ள அந்த சத்திய புருஷனும் தேன்களாகும் அவனே ஆன்மாவைப் போலாவான். அவன் அமுதன் பிரமன் சகலமுமாகும்.

இந்த மனிதர்கள் எல்லாப் பொருள்களின் தேனுகும் எல்லாப் பொருள்களும் மனிதர்களின் தேனுகும். மனிதர்களில் தேஜோமயமாயுள்ள மனிதனும், மனிதனில் தேஜோமயமான அந்த மனிதனும் தேன்களாகும். அவனே ஆன்மாவைப்போலாகும். அவனே அமுதன், பிரமன் சகலமுமாகும்.

இவ் வான்மா எல்லாப் பொருள்களின் தேனுகும். எல்லாப் பொருள்களும் ஆன்மாவின் தேனுகும். இந்த ஆன்மாவிலுள்ள தேஜோமயமான புருஷனும், அந்த ஆன்மாவும் ஒன்றேயாகும்.

இவ்வான்மாவே எல்லாப் பொருள்களின் தலைவனுகும். எல்லாப் பொருள்களின் அரசனுகும். சக்கரத்தின் தொப்பைக்கட்டையில் பற்கள் இணைந்துள்ளதுபோல் ரதத்தின் கடையாணி போல் எல்லாப் பொருள்களும், தேவர்களும், எல்லா சகங்களும், பிராணங்களும் இந்த ஆன்மாவிலே சரணுகதி யடைந்துள்ளன.

இரு இரு பொருளாகக் கூறிய இவைகளைக் காரண காரியமென்று அறிந்துகொள்ளவும் என ஒரு ரிஷி கூறினுர். தேன் என்றுல் இவைகளைத் தேன்போல் எண்ணி அனுபவிக்கவும் என வேறொரு ரிஷி கூறினுர்.

இங்கு உள்ள எல்லாப் பொருள்களிலும் இத் தேன் பட்சியை போலுள்ளபடியால் அவனுக்குப் புருஷன் எனப் பெயர் என ஒரு அனுபவ ரிஷி மகிழ்ந்தார். அவரால் நிறையாத பொருளே இல்லை என அறிஞர் ஒருவர் அச்சபையில் தலையை யசைத்தார். ஆத்மா தன் உண்மை வடிவத்தைப் புலனுக்க எல்லாப் பொருள் மிருகங்களாக இங்ஙனம் தேன் மாதிரி தோன்றினர், என வேறொரு ரிஷி சொன்னர்.

இந்த ஆன்மாவே பிரமமாகும். அவனுக்குக் காரிய காரண மில்லை. அகம் புற மில்லை. அவன் அகண்டம். அவனே அற்புதத் தேனுகும். அவனை அறியும் இதுவே மது வித்தை எனப்படும். (பி. 2—5)

## 10. யாக்ஞவல்கியர் கதை

ஆதியிலே வைதேக நாட்டில் சனகன் என ஒரு அரச ரிருந்தார். அவர் பெரிய அசுவமேதயாகம் ஒன்று செய்தார், குருநாட்டுப் பிராமணர்களும், பாஞ்சலப் பிராமணர் பலர் அந்த யாகத்தைச் சிறப்பிக்கவந்தார்கள். அவர்களில் அறிஞர் எவர் என அறிய ஆபரணமுடன் அலங்காரஞ் செய்த ஆயிரம் பசுக்களை அவர்கள் முன் நிறுத்தி உங்களில் ஞானம் மிகுந்தவர் எவரோ அவர் இந்தப் பசுக்களை எல்லாம் அழைத்துச் செல்ல லாமென ஆச்ஞாபித்தார். அங்குள்ள பிராமணர்கள் எல்லாம் சற்றுத் தயங்கவே, யாக்ஞவல்கியர் தனது சிடன் ஒருவனை நோக்கிப் பசுக்களை அழைத்துச் செல்லலாம் என்றார். அங்கு கூடி யிருந்த அடியிற்கண்ட பிராமணர்களுக்கு கோபமதிக ரித்துவிட்டது. (1) ஆசுவலன், (2) ஜாரத்காரவ ஆர்தபாகன், (3) புஜ்யுலாஹ்பாயனியன், (4) உஷஸ்த சாக்ராயணன், (5) கஹோால கௌஷீதகேயன், (6) கார்கிவாசனக்கவி

(7) உத்தாலக அருணியன், (9) கார்கிவாசனக்கவி, (10) விதக் த சாகல்யன்.

இப் பிராமணர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து யாக்ஞ வல்கியரை நாம் தோற்கடிக்க வேண்டுமென எண்ணி ஒவ் வொருவராக அவரைப் பரிட்சை செய்யலானார்கள். ஆனால் வெகு தினங்கள் அவரைப் பல வினாக்கள் வினவி சந்தேகந் தீர்ந்து அவரே பெரியார் எனத் தெளிந்து கடைசியில் வணங்கினார்கள். (பி. 22.)

## 11. யக்ஞ கதை

அசுவலன் என்னும் பிராமணன் சில வினாக்களை வினவி யாக்ஞ வல்கியரைத் தோற்கடிக்க வேண்டுமென யக்ஞத் தைப்பற்றி அடியிற்கண்டவாறு வினவித் தெளிந்தான்.

வினா—யக்ஞ சம்பந்தமானவைகள் எல்லாம் மிருத்யுவினால் பற்றப்பட்டதாகும். ஆனால் மிருத்யுவினால் எதையும் ஜயிக் கலாம்; ஆகலால் யக்ஞ புருஷன் எங்ஙனம் மிருத்யுவி னின்று விடுதலையாவான்? விடை—அக்னியும் மொழியுமான ஹோத்திரி புரோகிதரால் விடுதலை யாகவேண்டும். மொழியே யக்ஞத் தலைவனாவதால் அவனை அறிவதவசியமாகும்.

வினா—ஹோத்திரி புரோகிதன் எத்தனை ரிக்குக்களை பயன் செய்கிறான்? விடை—பௌருணுவாக்ய்ம், ஆஜ்யம், சாஸ்யம், என மூன்று ருக்குக்கள்

வினா—அவைகளால் ஆதாய மென்ன? விடை—பிராணி னுள்ளதை யெல்லாம் பற்றுவான்.

வினா—எதையும் இரவு பகலால் பற்றலாம் எதையும் இரவு பகல் விடுதலை யாக்கும். யக்ஞத்தலைவன் இரவு பகலிலிருந்து விடுதலையாவதெப்படி? விடை—சூரியன் எனப்பட்டு

அதர்வாயு என்னும் புரோகிதனுன கண்களால் மிருத்யுவி னின்று நீங்கலாம்.

வி௵—யக்ஞத்திலே அதர்வாயு என்னும் புரோகிதனுக்கு ஆகுதிகள் எத்தனை? அதன் லாபமென்ன.—விடை—மூன்று. அதாவது ஆகுதி செய்தவுடன் சுடராவது. ஒன்று; அதனுல் தேவலோகமாகும். ஆகுதி யளித்தவுடன் சத்தமொன்று தோன்றும்; அதனுல் பிதரு லோகத்தைப் பெறலாம். அப்பால் ஆகுதியின் சிலபாகம் அடியிற் சேரும்; அதனுல் அடிப்பாகத்திலுள்ள மனிதர்களைப் பற்றுவான்.

வி௵—வளர்பிறை தேய்பிறை சந்திரன் எதையும் பற்றும்; எதையும் விடுதலை யாக்கும். யக்ஞத்தலைவன் இவைகளி னின்று எப்படி நீங்குவான்? விடை—சந்திரன் எனப் படும் பிராமணப் புரோகிதனுன மனம் என்பவரால் மிருத்யுவை ஜயித்து சுவர் கமும் செல்லலாம்.

வி௵—யக்ஞத்தலைவனுன பிராமணப் புரோகிதனைக் காப்பாற் றுபவன் எவன்? விடை—விசுவேதேவன் எனப்படும் மனம் ஒன்றினுலேயாகும். அவன் ஒருவனே அனந்த மாகையால் அனந்தத்தை அவனுல் பற்றலாம்.

வி௵—எல்லா திசைகளையும் பற்றியுள்ளவன் எவன்? எவன் அனைத்தையும் ஜயிப்பான்? யக்ஞத்தலைவன் இவனுல் மிருத்யுவினின்று எங்ஙனம் விடுதலை யடைவான்? விடை—காற்று எனப்படும் உத்காத்திரி புரோகிதனுன சுவாசத்தால் விடுதலை யடையலாம்.

வி௵—உத்காத்திரிப் புரோகிதனுக்கு எத்தனை ருக்குக்கள் வேண்டும்? விடை—மூன்று. புரோனுவாக்யம், ஆஜ்யம், சஸ்யம்.

வி௵—அதை விளக்கவும். விடை—(1) புரோனுவாக்யம் பிராணனுகும்; (2) ஆஜ்யம் அபானனுகும்; (3) சஸ்யம்

வியானனுகும். இவைகளால் முறையே பூலோகம், புவலோகம், சுவர்க்கத்தைப் பற்றலாம்.

ஆசுவலனன் உடனே வெட்கமாகி நீங்கள் பெரிய புருஷர் என நமஸ்கரித்து சிடனுறன். (பி. 3—2)

## 12. எட்டு வீடுகள் கதை

பக்ஞத்தைப்பற்றி நான் சரமாரியாக வினக்கள் வினவி யாக்ஞவல்கியரை திணறச் செய்வேன் என ஜாரத்காரவ ஆர்தபாகன் வினவாரம்பித்தான்.

வின—யக்ஞத்திற்கு வீடுகள், அதிவீடுகள் எத்தனை? விடை—என் வீடுகளும், எட்டு அதிவீடுகளாகும்.

வின—அவைகளை விளக்கவும். விடை—பிராணன் ஒரு வீடு. அவன் அபானன் என்னும் அதிவீட்டால் பற்றப்பட்டுள்ளான். அபானனுலேயே நாற்றமறிகிறேும். வாக்கு இரண்டாவது வீடாகும்; அவன் நாமம் என்பதால் பற்றப்பட்டுள்ளான். வாக்கினுல் நாமத்தை உச்சரிக்கிறேும். அங்ஙனமே, நா, கண், செவி, மனம், கைகள், சர்மம் வேறு ஆறு வீடுகளாகும், அவை ருசி, ரூபம், சத்தம், விருப்பம், செயல்கள், பரிசம் என்னும் அதிவீடுகளால் பற்றப்பட்டது, ஏனெனில், முறையே அவைகளால் ருசித்து, கண்டு, கேட்டு, விரும்பி, செய்து, பரிசிக்கிறேும். (பி. 3—2—1—9)

## 13. மரண கதை

அர்த்தபாகர் சந்தேகந்தெளிந்த கதையே இதுவாகும்.

வின—யாக்ஞவல்கியரே! தேகம் நீங்கியவுடன் பிராணன்

பெரிய ரிஷியின் தேகத்தில் அசையுமோ? விடை—இல்லை; ஆனால் அவனில் அது குவியும். அது குவிந்த நிலையிலேயே இறந்தவன் அமைதியில் சாய்வான்.

வின—ஒருவன் இறந்தபிறகு அவனிடமிருந்து நீங்காமலிருக்கும் பொருள் எது? விடை—அந்த நீங்காப் பொருளுக்கு நாமமெனப் பெயர். அது அனந்தம். அதற்கு விசுவேசவர் எனப் பெயர். அதற்கு முடிவே இல்லை.

வின—மிருத்யுவிற்கு எதுவும் உணவாகும்; ஆனால் எந்த தேவதைக்கு மிருத்யு உணவாகும்? விடை—அக்கினி என்னும் மிருத்யுவே அனைத்தையும் உண்ணுவான். ஆனால் அவன் சலத்தின் உணவாகும்.

வின—பெரியாரே, கடைக்காலத்திலே ரிஷியின் மொழி அனலில் சேரும். சுவாசம் காற்றுடன் சேரும். கண், மனம், காது, தேகம், ரோமம், உதிரம், ரேதஸ் முறையே, சூரியன், சந்திரன், திசை, நிலம், ஔஷதம், வனஸ்பதி ஜலத்திலே சேர்ந்தால் புருஷன் எவனிடம் செல்லுகிறான்? விடை—பெரிய கேள்வியாகும். விடையளிப்பது கஷ்டம். பகிரங்கமாய்ப் பேசுவது நமக்கும் கூர்மையளிக்காமல் மற்றவர்களையும் பிரமிக்கச் செய்யும். நாம் தனியாகப் பேசுவோம் என அவனைத் தனியாய் அழைத்துச் சென்று இதை பரிபூரணமாய் அறிவதென்பது முடியாத காரியம். நாம் எத்தனை நினைத்தபோதிலும் இன்னம் அதிகமாய் நினைக்கவேண்டுமென்பதைப் புலனாக்கும் என்பதை அனுபவமாக்கினர். இதைத்தான் வடமொழியில் நேதி நேதி என்பது. நீ எவ்வளவு தான் சொல்லவும். அப்பவும் அவை இல்லை இன்னமதிகமெனச் சொல்லவேண்டுமென்பதையே அம்மொழி புலனாக்கும். செயல் ஒன்று தான் சகத்தில் சிறந்தது. பாவச்செயலால் பாவியாகவும், புனிதச் செய

லால் புனித புருஷனுகவும் ஒருவனுவன் என்பதைத்தான் இவ்விருவர்களும் அடிக்கடி சொல்லிக் கொண்டதாக மற்ற ரிஷிகள் கூறினார்கள்.

அர்த்தபாகர் பிறகு யாக்ஞவல்கியருக்கு நமஸ்காரஞ் செய்வதையறிந்து அவரும் தோற்றுவிட்டாரென மற்ற ரிஷிகள் அறிந்தார்கள். (பி. 3—2)

## 14. பாரிட்சதை கதை

புஜ்யுலாஹ்யாயனி யாக்ஞவலகியரை நோக்கி வினவியதாவது :—நான் சிலமாணவர்களோடு சேர்ந்து எங்கள் ஊர் சமீபமுள்ள பதஞ்சல காப்யர் வீட்டை அணுகினேம். அந்த கிரகஸ்தனின் மகளை காந்தர்வன் ஒருவன் பற்றியிருந்தான். அவனை நீ யார் என நான் வினவியதற்கு நான் அங்கிரஸன் எனப்படும் சுதன்வான் எனச் சொன்னுன். உலகத்தின் முடிவு எது என அவனை வினவினேன். அதற்கு அவன் பாரிட்சைதை என்றுன்.

அது எங்களுக்குப் புரியவில்லை. அந்த பாரிட்சைதையைப் பற்றி எங்களுக்குரைக்கவும் ?

விடை—அசுவமேத யாகஞ் செய்தவர்கள் செல்லுமிடமேயதுவாகும்.

விஞ—அது எங்கே? விடை—சூரியரதத்தின் 32 பிரயாணை வழியே இவ்வுலகமாகும். இப்புவி அதற்கு இரண்டு முறை அதிகமாகி அதைச் சுற்றியுள்ளது. அதற்கு இருமுறை அதிகமாகி கடல் அதைச் சூழ்ந்துள்ளது. அவைகளின். நடுப்பாகம் க்ஷௌரக்கத்தியின் முனைபோலாகும். அல்லது சிறிய கொசுவின் சிறகு போலாகும். இந்திரன் பறவையாகி, அதைக் காற்றிற்களித்தான். வாயுவானவன்

அதை பாதுகாத்து அசுவமேதயாகஞ் செல்லுபவர்களை அங்கு எடுத்துச் செல்லுகிருன். இங்ஙனம் வாயுவின் வன்மையைத் துதிசெய்து வாயுவே தானுகவே ஒவ்வொன்றுமாவான். அவனே யாவுமாகும். அவனை அறிந்தவன் மிருத்யுவை ஜயிப்பான். அவனே பாரிட்சதையாவான் உடனே புஜயுலாஹ்யாயனன் மௌனமானுன். (பி. 3—3)

## 15. உஷஸ்த சாக்ராயணர்

உஷஸ்தசாக்ராயணர் நாம் ஆத்மாவைக் குறித்து பற்பல வினுக்களை வினவி யாக்ஞ வல்கியரைத் திணறச்செய்வோம் என மகரிஷியை அணுகி சந்தேகந் தெளிந்தார்.

வினு—காணும் காணுத பிரமம் எது? எல்லா அகத்திலுள்ள ஆன்மா எது? விடை—உன்னகத்திலுள்ள ஆத்மாவே எங்குமாகும். அதுவே காணும் காணுத பிரமமாகும்.

வினு—எந்த ஆன்மா எங்குமுள்ளது? விடை—எவன் பிராணனேடு பிராணனுகி, அபானனேடு அபானனுகி, வியானனேடு வியானனுகி, சுவாசிக்கின்ருனேஅவனே உன் ஆன்மாவாகும். அவனே எங்குமுள்ளான்.

வினு—இதுதான் பசு, இதுதான் குதிரை எனச் சொல்வதால் விளக்கமாவது போல் நீங்கள் சொல்லுகிறீர்கள். காணும் காணுமலாகி எங்குமுள்ள பிரமத்தைப்பற்றி எனக்கு நன்குரைக்கவும். விடை— எங்குமுள்ள உனதாத்மாவே!

வினு—இவ்வான்மாவைப் பற்றி எனக்கு இன்னமதிகமாயுரைக்க வேண்டும்? விடை—உண்மையாய் காட்சியைக் காண்பவனையும், கேட்பவனை உண்மையாய்ச் செவியுறுபவனையும், ஞானத்தை அறியும் ஞானியையும், அறிவை அறியும் அறிஞனையும் நீ காண,கேட்க, உணர அறியமுடியாது? இது

தான் எங்குமுள்ள உன் ஆன்மாவாகும். அன்னியப் பொருள்கள் எல்லாம் தீமையாகும். உடனே உஷஸ்த சாக்ராயணர் வெட்கமடைந்து மௌனமானர். (பி. 3—3)

## 16. கௌஷீதகேயர்

கபோல கௌஷிதகேயன் யாக்ஞ வல்கியரை அணுகி ஆத்மஞானத்தை எங்ஙனமறிய முடியும் என வினவியதற்கு யாக்ஞ வல்கியர்,

பசி, தாகம், சோகம், மோஹம், மூப்பு மிருத்யுவை ஜயித்து, மக்கள், ஐசுவரியம், அகிலங்கள் முதலிய விருப்பங்களினின்று நீங்கி யாத்திரையிலாகவேண்டும். வன்மையிலும், அறிவிலும் சாய்ந்து முனியாவதே பிராமணனவதாகும். பிராமணனவதே ஆன்மஞானத்தை அறிவதாகும். இதுவே வழியாகும். அன்னிய (புறம் நாடும்) வழி தீமையேயாகும் என மறுமொழியளிக்கவும் கபோல கௌஷிதகேயர் மௌனமானர். (பி. 3—5)

## 17. கார்கி வாசனக்கவி

கார்கிவாசனக்கவி யாக்ஞவல்கியரை அணுகி இங்குள்ள அனைத்தும் நெசவுபாவில் இழையைப்போல் எங்ஙனம் சேர்க்கப் பட்டுள்ளது என வினவியதற்கு யாக்ஞவல்கியர்,

இங்குள்ள யாவும் சலத்திலும், அது காற்றில், காற்று அந்தரிட்சத்தில் அந்தரிட்சம், அந்தரிட்சம் காந்தர்வ லோகத்தில் காந்தர்வலோகம் சூரிய லோகத்தில் சூரிய உலகம் சந்திரன் உலகில் சந்திரன் உலகம் நட்சத்திர உலகில், நட்சத்திர

உலகம் தேவ லோகத்தில் தேவலோகம் இந்திர லோகத்தில் இந்திர லோகம் பிரஜாபதியினிடம் பிரஜாபதி பிருமலோகத்தில் என பதிலளித்தார்.

பிரமலோக மென்பது அனைத்து மாகும். அதைப்பற்றி நான் இனி எத்தனை கூறினாலும் அத்தனை வளரும். அதைப் பற்றி அதிகமாய் வினவினால் உன் சிரமே சிதறும். அதற்கு எல்லையே இல்லை என்றார். வாசனக் கவியும் சாந்தமானான். (பி. 3—6)

## 18. உத்தாலக ஆருணி

உத்தாலக ஆருணி அடியிற் கண்ட சம்பாஷணையால் யாக்ஞ வல்கியருடன் உண்மையை அறிந்து அவரை வணங்கினான்.

வினா—ஏதோ ஒரு நூலினால் உலகங்களும் எல்லாப் பொருள்களும் ஒன்று சேர்க்கப் பட்டிருக்கிறதாம். அதை அறிவிக்கவும். விடை—காற்று என்னும் நூலினால் உலகங்களும் எல்லா சீவ ராசிகளும் ஒன்றாக இணைக்கப் பட்டிருக்கின்றன. இறந்தவனில் காற்று என்னும் நூல் சூன்யமாகையால் நூலினால் சேர்க்கப்படாதவன் போல அவன் அங்கங்கள் தோன்றும்.

வினா—அகத்தில் அரசுபுரிபவன் யார்? விடை—எவன் நிலத்திலே வசித்து, அதன் அகத்திலேசாய்ந்து, எவனை நிலம் அறியாமலிருக்கின்றதோ அவனுக்கு இந்நிலம் தேகமாகும். அவனே அகத்தில் சாய்ந்து அரசுபுரிகிறான். அவன்அமுதனாகும். அவன், சலம், அனல், வானம், வாயு, சோதி, சூரியன் திசை, சந்திரன், ஆகாசம், இருள், தேயு, முதலியவைகளில் வசித்தும் அவைகளினகத்தில் அமைந்தும் அவைகள் அவனை அறிவதே இல்லை. ஆனால் அவன் தேகங்களோ,

சலம் அனல் வானம் முதலியவைகளாகும். அவனே அவை. களின் அங்கங்களிலாகி அவைகளை எங்கும் அரசுபுரிகிறுன். அவனே உன் ஆன்மா. அகத்திலுள்ள அரசன் அமுதமய மானவன். இங்ஙனமே அவன் தேவர்களுக்குள்ளே வசிக்கிறுன். இனி தேகத்திற்குள் வசிக்கும் பிரமத்தை அறிவிக்கிறேன். அவன் எல்லாப் பொருள்களிலும் வசித்து எல்லாப் பொருள்களின் அகத்திலும் உள்ளான். அவன் தேகமே எல்லாப் பொருள்களான போதிலும் எல்லாப் பொருள்களும் அவனை அறிவதில்லை. ஆனுல் பொருள்களின் அகத்திலே அவன் அரசுபுரிவான். அவனே உன் ஆன்மாவாகி அகத்திலே அரசுபுரிபவன். அவன் அமுதமயமான புருஷன்.

அவன் பிராணன், நாக்கு, கண், காது, மனம், சர்மம், விக்ஞானம் முதலியவைகளில் வசித்து அவைகளின் அகத்திலுள்ளான். ஆனுல் பிராணன் நாக்கு முதலியவைகள் அவனை அறிவதில்லை. பிராணன் நாக்கு முதலியவைகள் அவன் தேகங்களாகும். அவைகளுக்குள்ளே அமைந்து அவன் அரசு புரிகிறுன். அவன் தான் உன் ஆன்மா. அகத்தரசன். அமுதனுகும்.

அவனே ரேதஸில் வசித்து அதனகத்திலுள்ளான். அவன் தேகம் ரேதஸான போதிலும் அது அவனை அறிவதில்லை. அவனே ரேதஸை அரசுபுரிகிறுன். அவனே உன். ஆத்மா, அமுதன். நாம் காண்பதில்லை; கேட்பதில்லை; ஆனுல் அவன் காண்பான், கேட்பான். நாம் அவனை அறிவதில்லை, உணர்வதில்லை. ஆனுல் அவன் அறிவான்; உணர்வான். அவனைவிட காண்பவனில்லை, கேட்பவனில்லை, உணர்பவனில்லை, அறிபவனில்லை. இதுவே உன் ஆன்மாவாகும். உன்னகத்திலே அரசுபுரிபவனுகும், அமுதனுகும். மற்ற புறமானவைகளெல்லாம் தீமையாகும்.

உத்தாலக ஆருணி இதைச் செவியுற்றுக் கலக்கம் நீங்கினன். (பி. 3—7)

## 19. வாசனக்கவி

வாசனக்கவி அடியிற்கண்ட சில வினக்களை வினவி வெட்கமடைந்து யாக்ஞவல்கியரே அறிஞர் என சமாதான மாகி அவர் காலில் விழுந்தார்.

வின—சுவர்கத்திற்கு மேலாகி, புவிக்குக் கீழாகி சுவர்கம் சகத்தைத் தழுவி முக்காலம் அதற்கப்பாலுள்ள அவன் எப் பொருளில் நெசவு பாவு நூல்போல் இழைக்கப்பட்டுள்ளான்?

விடை—ஆகாசத்திலே.

வின—ஆகாசம் எப்பொருளிலே நெசபாவு நூல்போல் இழைக்கப் பட்டுள்ளது. விடை—பிராமணர்கள் இதை அழியாப் பொருளெனப்படும் அட்சரம் என்பார்கள். இது தூலமில்லை; சூட்சமமில்லை. நீளமில்லை, குறுகியதில்லை; அனலைப்போல் சிகப்பில்லை. சலத்தின் நீர்த்தன்மையுமில்லை. அதற்கு நிழலுமில்லை, இருளுமில்லை; காற்று, வானம், பசை, உருசி, கந்தம், கண்கள் செவிகள், சொற்கள், சித்தம். தேயு, பிராணன் வாய், அளவு, அகம் புறம் இல்லை. அது புசிப்ப தில்லை; புசிக்கப்படுவதில்லை.

வின—அதன் மகிமையை நீங்கள் சொல்லவேண்டும்?

விடை—இந்த அட்சர மகிமையினலேயே சூரியனும் சந்திர னும் தனிமையாய் நிற்கிறார்கள். இதன் மகிமையினலேயே, நிமிஷம், முகூர்த்தம், இரவு, பகல். பட்சம், மாதம், வருஷம் முதலியவைகள் தனிமையாய் நிற்கும். இந்த அட்சர மகிமை யினலேயே சில நதிகள் கிழக்கும் வேறு நதிகள் மேற்கும் பாயும். இதன் மகிமையினலேயே தானமளிப்பவர்களைப்

புகழ்கிறார்கள். தேவர்கள் யஜமானர்களையும் பிதுருக்களையும் நாடுகிறார்கள்.

இந்த அட்சரத்திலேயே ஆகாசமிழைக்கப்பட்டதாகும். இதை அறியாதவன் துக்கத்திற்குள்ளாவான்.

## 20. தேவ இரகசியம்

விதக்த சாகல்யன் தேவர்களைப்பற்றி அடியிற் கண்டவாறு வினவி உண்மையை அறிந்தான்.

வினா—எத்தனை தேவர்களுண்டு? விடை—முப்பத்திமூன்று என்பார். ஆனால் ஆறு, இல்லை,மூன்று. ஆமாம் இரண்டு தான். இல்லை, இல்லை. ஒன்றையே. நிச்சயமாய் ஒரே ஒரு தேவரோயுண்டு.

வினா—மூன்று, முந்நூற்றி மூன்று மூவாயிரம் தேவர்கள் எனச்சொல்லுகிறார்களே? விடை—இவைகள் எல்லாம் ஒரே ஒரு தேவரின் பற்பலவன்மைகளேயாகும். உண்மையில் 33 தேவர்கள் எனக்கூறலாம்.

வினா—முப்பத்து மூன்று தேவர் யார்? விடை—எட்டு வசுக்கள். பதினொன்று உருத்திரர்கள். பன்னிரண்டு ஆதித்தியர்கள். இவர்களோடு இந்திரன்,பிரஜாபதியைச் சேர்க்கவும்.

வினா—வசுக்களை விளக்கவும். விடை—கனல், நிலம், வாயு, அந்தரிட்சம், ஆதித்தியன்,சோதி, சந்திரன், நட்சத்திரம். உலகத்திலுள்ளவைகள் இவைகளில் வசிப்பதால்இவைகளுக்கு வசுக்கள் எனப் பெயராகும்.

வினா—ருத்திரர்கள் யார்?விடை—ஐந்து பிராணேந்திரியம், ஐந்து ஞானேந்திரியம், பதினொன்வாறது ஆத்மாவாகும். அவைகள் தேகத்தின்று நீங்கியவுடன் நம்மை ரோதிக்க அழச்செய்வதால் அவைகளுக்குருத்திரன் எனப் பெயராகும்.

வினு—ஆதித்தியர்கள் யார்? விடை—பன்னிரண்டுமாதங்களுக்கு ஆதித்தியர்கள் எனப் பெயராகும். ஒவ்வொன்றையும் அவைகள் அடுத்துச்செல்வதால் அவைகளுக்கு ஆதித்தியர்கள் எனப் பெயராகும்.

வினு—இந்திரனும் பிரஜாபதியும் யார்? விடை—இந்திரன் இடிமுழக்கமாகும்; பிரஜாபதி யக்ஞமாகும்.

வினு—இடி எது, யக்ஞம் எது? விடை—இடிப்பொருள்களாகும். யக்ஞம் பசுக்களாகும்.

வினு—ஆறு தேவர்கள் யார்? விடை—அனல், நிலம், வாயு, அந்தரிட்சம், ஆதித்தியன், சோதி, முன் சொன்ன 33 தேவர்களும், இவ்வாறு தேவர் களாகும்.

வினு—மூன்று தேவர்கள் யார்? விடை—தேவர்கள் எல்லாம் வசிக்கும் இம்மூன்று சகங்கள்.

வினு—இரண்டு தேவர்கள் யார்? விடை—உணவும் சுவாசமுமாகும்.

வினு—ஒன்றரை தேவர்கள் யார்? விடை—ஒருவனைப் போலிருந்து வீசுபவனே ஒன்றரைத்தேவனுகும். ஏனெனில் காற்று வீசுவதினுல் ஒவ்வொன்றும் ஒன்றரை யாவது போலாகும்.

வினு—ஒரு தேவர் எவர்? விடை—பிராணனுகும். அவனையே சூத்ராத்மன் எனச்சொல்வது. அவனே பிரமனுகும். தியத் எனவும் அவனைச் சொல்வதுண்டு.

வினு—அவனைப் பற்றி இன்ன மதிகமாய் நீங்கள் உரைக்க வேண்டும்? விடை—அவன் வாசம் இப்புவியாகும், கண் அனலாகும், மனம் சோதியாகும். ஒவ்வொரு ஆன்மாவின் மூலமுமாகும். இத்தேக வடிவமான புருஷன் அவனே யாகும்.

இவ்விடையைச் செவியுற்றவுடன் சாகல்பர் தெரிந்தது போல் தலையை யாட்டினுர். பிறகு பரஸ்பரம் அடியிற் கண்டவாறு பேசினுர்கள்.

வினு—இச்சரீர வடிவமானவனுக்கு தேவதை யார்? விடை—அமுதனுகும்.
வினு—காமத்தில் வசித்தது, இருதயத்தில் கண்களுடன், சோதியான மனமுடன் கூடிய புருடன் எல்லா ஆன்மாவின் மூலமாகும். அவனே அவனுகும். ஆனல் அவன் தேவதை யார்? விடை—ஸ்திரி.
வினு—அங்ஙனமே சூரியன், செவி, இருள், மின்னல், சலம், ரேதஸ், முதலியவைகளில் வசித்து சட்சுவை சகமாகக் கொண்டு, மனதை சோதியாகப்பற்றி சர்வாத்மாவான, ஒவ்வொன்றும் அவனுகும். அவைகளின் தனித்தனி தேவதைகள் யார்? விடை—சத்தியம், வானம், மிருத்யு, அசுவருணன், பிரஜாபதி யாகும். (பி. 5)

## 21. பிரமம் எங்கே?

வினு—பிரம நிலயத்தின் தேவர்களை அறிவிக்கவும். விடை—பிரம நிலயத்திற்குப்பல தேவதைகள் உண்டு. கிழ்திசைக்கு சூரியனே தேவதையாகும்.
வினு—சூரியனின் மூலம் எது? விடை—கண்களில்.
வினு—கண்களின் ஆதாரம் எங்கே? விடை—இருதயம். இருதயத்திலேயே எல்லா நிறங்களு முண்டு.
வினு—தெற்கு திசை தேவதை யார்? விடை—யமன்.
வினு—யமன் எங்கேயுள்ளான்? விடை—யக்ஞத்திலே.
வினு—யக்ஞத்தின் மூலம் எது? விடை—தட்சிணை. வினு—தட்சிணத்தின் மூலம் எது? விடை—சிரத்தையாகும். தட்சிணையினுதாரவு சிரத்தை. சிரத்தையின் மூலம் தட்சிணை.
வினு—சிரத்தை எங்கே நிலைக்கும்? விடை—இருதயத்தில்.
வினு—மேற்கு திசை தேவதை யார்? விடை—வருணன்.

வினு—வருணன் நிலை எங்கே? விடை—சலம். வினு—சலத்தின் நிலயம் எங்கே? விடை—ரேதஸில். வினு—ரேதஸின் நிலயம் எங்கே? விடை—இருதயம். வினு—வடக்கு திசை தேவதை எங்கே? விடை—சோமனுகும். வினு—சோமனின் மூலம் எது? விடை—தீட்சை. வினு—தீட்சையின் மூலம் எங்கே? விடை—சத்தியம். வினு—சத்திய மெங்கே? விடை—இருதயம். வினு—நிலையான தேவதை எது? விடை—அக்னி. வினு—அக்னியின் மூல மெங்கே? விடை—மொழி. வினு—மொழியின் மூலம் எங்கே? விடை—இருதயம்.

இருதயத்தை நம்மிடமே இருப்பதாக எண்ணவும். வேறிடத்திலிருப்பதாக எண்ணவேண்டாம்.

வினு—தேகமும் இருதயமும் எங்கு நிலைத்துள்ளது?

விடை—பிராணனில். பிராணன் அபானத்தில், அபானன் வியானத்தில், வியானன் உதானத்தில், உதானம் சமானத்தில்.

நான் எவ்வளவு சொன்னுல் என்ன? சொல்வதெல்லாம் நிறையாமல் குறைவாகவே யாகும். சொல்லச் சொல்ல இன்னமதிகமாய்ச் சொல்லவேண்டுமென்பதைத் தவிர வேறு வழியில்லை. அதை சூட்சமமாய்த் தெரிவித்தால் இதுவுமில்லை இதுவுமில்லை என அறிவிக்கும் நேதி நேதி என்னும் மொழியையே ஒருவனறிய வேண்டும். வேறு மொழியாலும் அதைக் கூற முடியாது. (பி. 3—9)

## 22. பிரம கதை

புருஷன் கானகத்திலுள்ள பெரியமரம் போலானவன். அவன் ரோமங்கள் இலைகளாகும், சர்மம் மரத்தின் பட்டை போலாகும். சர்மத்தினின்று உதிரம் பாயும். மரம் பட்டை

யினின்று இரசம் தோன்றும். மரத்திலுள்ள வரிசைகள் மாமிசம் போலாகும். குறுத்து இளம் மாமிசம் போலாகும். மரத்தின் கனத்த பாகம் எலும்பாகும்.

மரத்தை வெட்டிவிட்டால் வேரினின்று மறுபடியும் செடி தோன்றலாம். ஆனல் மனிதன் மறைந்தால் எந்த மூலத்தினின்று தோன்றுவான் ?

ரேதஸென்று சொல்லாதே. ஏனெனில் ரேதஸ் என்பது சிவனில் தோன்றுவதாகும். தானியத்தினின்று தோன்றுவது மிருத்யுவினின்று புலனுவதாகும்.

ஒருமுறை பிறந்தால் மறுபடியும் அவன் பிறப்பதில்லை. ஏனெனில் அவனை மறுபடியும் சிருட்டி செய்வது யார் ?

விஞ்ஞானமான அந்தமானவன் பிரமனுகும். அவனே அனைத்தின் மூலமாகும். தட்சிணையளிப்பவனுக்கும் நிலையாயிருப்பவனுக்கும் அறிபவனுக்கும் அவனே ஆதாரமாகும்.

இக்கதைகளை எல்லாம் செவியுற்றவுடன் சாகல்யரும் பணிந்தார். (பி. 3—9—28—1—7)

## 23. சனகர் ஞானோதயம்

சனகர்—பெரியாரே : ஜித்வானசைலினி மொழியே பிரமன் எனச் சொன்னுன். இது உண்மையாகுமோ ?

யாக்ஞ—அதன் தேகத்தையும், நிலயத்தையும் கூறினனு ?

ச—இல்லை.

யா—சரி ! நீ சரியாய் அறியவில்லை.

ச—நீங்கள் கூறவும்.

யா—நாக்கே அதன் தேகமாகும். வானமே அதன் நிலயம். அதை நீ அறிவாக எண்ணவேண்டுமே யொழிய பிரமமாக எண்ணலாகாது.

ச—அறிவின் குணங்கள் என்ன? யா—மொழியே அறிவாகும். அறிவால், நண்பனே உணர்வோம். வேதாதி முதலியவைகளைத் தெரிந்து கொள்வோம். யக்ஞம் உணவு உலகத்திலே யாவற்றையு மறிந்துகொள்வோம். மொழியை பிரமமாக உபாசிப்பவனுக்கு அறிவு மோசஞ்செய்வதில்லை. அங்ஙனம் உபாசிப்பதால் தேவனுகி தேவர்களில் தோய்வான்.

ச—உதங்க சௌல்பாயனன் பிராணனே பிரமன் எனவும், பர்குவார்ஷணன் கண்களை பிரமன் எனவும், கர்தபீ விபீத பாரத்வாஜன் செவியையும், சத்தியகாம ஜாபாலே மனதையும், விதக்த சாகலயன் இருதயத்தை பிரம மெனவும் கூறினுர்கள். இவைகளில் எது உண்மையாகும்?

யா—அவைகளின் தேகங்களையும் நிலயங்களையும் உனக்கு அறிவித்தார்களா? ச.—இல்லை.

யா—நீ அறிந்த பிரமம் உயிர் காட்சி, நற்செவி, சித்தம், இருதயமற்ற சிவர்கள் போலாகும்.

ச—பிறகு நீங்கள் அவைகளின் தேகங்கள் நிலயங்களை அறிவிக்கவும். அந்தந்த உபாசனைகளா லுண்டாகும் பயன்களை தெரிவிக்கவும்?

யா—உயிர் பிரமத்திற்கு பிராணனே தேகம். வானம் அதன் நிலயம். இதைப் பிரியப் பொருள் எனக் கருதவும். இதன் பிரியத்திற்காக மனிதன் செய்யாததே இல்லை. இந்த உபாசனையால் பிராணன் ஒரு பொழுதும் ஒருவனை மோசஞ் செய்வதில்லை. காட்சி பிரமத்திற்கு கண்களே தேகமாகும். வானம் அதன் நிலயமாகும். அதைச் சத்தியமென நாடவும். நீ பார்த்தாயா? ஆமாம், நான் என் கண்ணுல் பார்த்தேன். இம்

மொழிகளே அதன் சத்தியத்தைப் புலனுக்கும் என்பதை அறிவிக்கும். இங்ஙனம் உபாசிப்பவனுக்கு காட்சி ஒரு பொழுதும் மோசஞ் செய்வதில்லை. கேட்கும் பிரமனுக்குச் செவியே தேகமாகும். வானமே அதன் நிலயமாகும். அதை அனந்தமென உபாசிக்கவேண்டும். இங்ஙனம் உபாசிப் பவனுக்கு செவி ஏமாற்றுவதில்லை. மனம் என்னும் பிரமத் திற்கு மனமே தேகமாகும். வானமே அதன் நிலயமாகும். அதை ஆனந்தமென உபாசிக்கவும். மனத்தினலேயே மனி தன் ஸ்திரியைவிரும்புவான். பிறகு மகனைப்போல் பிறப்பான். இதுவே ஆனந்தமாகும். இப்படி உபாசிப்பவன் மனத்தி னின்று ஒரு நாளும் தளர்வதில்லை.

இருதய பிரமத்திற்கு இருதயமே தேகமாகும். வானமே அதன் நிலயமாகும். அதை நிலைப்பொருள் என உபாசனை செய்யவேண்டும். இருதயம் எல்லாப் பொருள் களின் தேகமாகும். எல்லாப் பொருள்களின் நிலயமு மாகும். இருதயத்திலே எல்லாம் நிலைத்துள்ளது. இங்ஙனம் உபாசிப்பவனுக்கு இருதயம் ஒருபொழுதும் தளர்வதில்லை. இங்ஙனம் உபாசனை செய்பவர்கள் எல்லாம் தேவர்களாகி தேவர்களில் சேர்வார்கள்.

இம்மொழிகளை யெல்லாம் செவியுற்று நாம் யாக்ஞ வல்கியரை இலேசாக நினைத்து நம்முடைய சிம்மாசனத்தி னின்று இறங்காமல் பேசுகிறோமே என எண்ணி வெட்க மடைந்து, கீழே இறங்கி, பெரியாரை நமஸ்கரித்து ஞானே தயமாகி வினயமுடன் அவரை மறுபடியும் சந்தேகங்களை வினவலானர் (பி. 4—1).

## 24. யாக்ஞவல்கியர்

யாக்ஞவல்கியர் சனகருக்கு உண்மையான பிரமத்தி ஞானை யிருப்பதை அறிந்து அடியிற்கண்டவாறு பிரமத்தின் கதையை அறிவித்தார்.

வலது கண்ணிலுள்ளவனை தேவர்கள் இந்திரன் என் பார்கள். இடது கண்ணிலுள்ளது அவன் மனைவி விராட ளாகும். அவர்கள் சேரும் நிலயம் இருதயத்திலுள்ள ஆகாச மாகும். இருதயத்திலுள்ள சிகப்புப் பிண்டமே அவர்களின் உணவாகும். இருதயத்திலுள்ள வலைகளால் அவன் மறைக் கப்பட்டுள்ளான். இருதயத்தினின்று உயரமாய்ச் செல்லும் நாடிகளிலே, உறக்கம் விழிப்புக்குச் செல்ல அவன் அசை வான். இருதயத்தில் நிலையாய் ஸ்தாபிக்கப்பட்ட அவன் நிலயம், இதம் எனப்படும் ஒரு ரோமத்தின் ஆயிரத்தில் ஒருபாகமான இழையின் பருமன்போலுள்ள நாடிகளால் நிறைந்ததாகும். இவை வழியாகவே உணவுகள் செல்லும். தூல தேகத்திற்கு தூல உணவை அளித்துவிட்டு இவன் சூட்சம உணவைக் கொள்ளுகிறான். அவன் ஆறு திசைகளி லும் பிராணன் செல்லும். இந்த ஆத்மாவைப் பற்றி நான் என்னவென்று சொல்லுவேன். நேதி நேதி எனச் சொல் வதைவிட வேறு மொழிகளால் அவனைச் சொல்ல முடியாது. அவன் அறிய முடியாதவன். அழிவற்றவன். அவனுக்குப் பற்றே இல்லை. அவனுக்கு எல்லை இல்லை. அவனுக்குத் துக்க மில்லை. அச்சமற்றவனான அவனை அறிந்துவிட்டாய்; நீயும் அச்சற்றவனானாய் என சனகரை ஆசிர்வாதஞ் செய்து பிரம கதையை முடித்தார் (பி. 4—2).

## 25. புருஷ சோதி

புருஷ சோதியை அறிவிக்கவேண்டுமென சனக மகா ராஜாவானவர் யாக்ஞவல்கியரை வினவினர். அதற்கு யாக்ஞவல்கியர் புருஷ சோதியைப் பற்றிச் சொல்லிய கதையே இதுவாகும்.

பகலிலே புருஷனுக்கு சூரியனே சோதிபோலாவான். இரவிலோ செயல்களைச் செய்ய இங்குமங்கும் செல்ல சந்திரனே சோதிபோலாவான். சூரியனும் சந்திரனும் சாய்ந்தால் அக்கினியே அவன் சோதியாவான். அக்கினிக் கப்பால் புருஷனுக்கு தீபமாக விளங்குபவன் சத்தமாகும். ஏனெனில் சத்தத்தினல், இருளில் ஒருவன் வழியைக் காண லாம். புருஷனுக்கு இவைகளெல்லாம் மறைந்துவிட்டால் ஆத்மாவே அவன் சோதியாகும். அதனாலேயே அவன் உட் கார்ந்து அசைந்து இன்னும் எல்லாம் செய்வது. (பி. 4-3-1-).

## 26. ஆத்ம தரிசனம்

சனகர் யாக்ஞவல்கியரை நமஸ்கரித்து நான் ஆத்ம தரிசனம் செய்ய விரும்புகிறேன். எனக்கு அது நன்கு புலனாக அதன் நிலைகளையெல்லாம் அறிவிக்க வேண்டுமென வணங்கியவுடன், பெரியார் ஆன்மாவின் நிலைகளை அடியிற் கண்டவாறு உரைத்தார்.

ஆத்மா தேகத்திற்கு சம்பந்தமானவைகளை எல்லாம் அடக்கி தான் தூங்காமல் சுயஞ் சோதியாகி புலன்களைப் பார்க்கிறான். சிறியகூண்டை பிராணனல் பாதுகாத்துத்தங் கமயமான புருடனான தனிபறவையான அமுதனானவன்

கூண்டிலிருந்து சென்று இஷ்டம்போல் இங்குமங்கும் செல்லு கிறான்.

தனது கனவிலே மேலும் கீழுஞ் சென்று பற்பல வடிவங்களை தரித்து பலர்களுடன் ஆனந்தமாகவோ துக்கமுடனோ ஆகின்றான். அவன் கிரிடா நிலயத்தை ஒருவன் பார்க்கலாம். அவனை ஒருபொழுதும் ஒருவரும் பார்க்க முடியாது.

நாம் விழித்திருக்கும் நிலையைப்போலவே தூக்க நிலையுமாகும்; ஏனெனில் விழிக்கும் நிலையிலுள்ளதையே தூக்கத்திலும் காண்போம். ஆழ்ந்த நித்திரையில் அவனிஷ்டம்போல இங்குமங்குமாகி விழிக்குங்கால் திரும்பிவருவான் ஆனால் இவன் விழிக்கும் நிலையில் வருங்கால் தூக்கத்தில் அவன் பார்த்தவைகளைக்கொண்டு வருவதில்லை. ஏனெனில் அவனுக்கு எங்கும் பற்றில்லை.கனவிலும் அங்ஙனமே அவன் சென்று விழிக்கும் நிலையில் அவைகளை எல்லாம் மறந்துவிடுவான்.

பின்னர் ஒரு நதியின் இரு கரையிலும் இங்குமங்கும் செல்வதுபோல் மனிதன் தூக்கம் விழிப்பு என்னும் இரண்டு நிலைகளி லிருப்பான். கழுகானது உலகமெல்லாம் பறந்து களைப்படைந்து சிறகைத் தொங்கவிட்டு எங்ஙனம் தனது கூட்டை அடைகின்றதோ அப்படியே தூக்க நிலையில் ஒருவன் தோய்ந்துஒரு விருப்பத்தையு மடைவதில்லை. கனவும் காண்பதில்லை.

உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களும் தான் தான் என நினைத்துவிட்டால் தான் மற்றவர்களால் கொல்லப்படுவதாக ஒருபொழுதும் நினைப்பதில்லை. பிரக்ஞை என்னும் ஞானத்திலே ஒருவன் தோய்ந்துவிட்டால் ஆழ்ந்த ஆலிங்கன காலத்தில் அகம் புறத்தைக் காணமலாவதுபோல் ஆன்மாவில் அகம்புறத்தைக் காணான். அக்காலத்திலே தனது உண்மையான வடிவத்தில் சேர்வதால் தந்தை, தாய், தேவர், திருடன்,

சண்டாளன் முதலியவர்களை ஏதோ தனிப் பொருள்களாக அவன் எண்ணுவதில்லை.

அவன் ஆழ்ந்த நித்திரையில் அவன் கண்டும் காண்பதில்லை; முகர்ந்தும் முகர்வதில்லை; ருசிப்பான் ருசிப்பதில்லை; மொழிந்தும் மொழிவதில்லை; கேட்டும் கேட்பதில்லை; நினைத்தும் நினைப்பதில்லை; பரிசித்தும் பரிசிப்பதில்லை; அறிந்தும் அறிவதில்லை. ஏன்? தன்னைவிட வேறு பொருளை நாடவில்லையால் அவன் எதைக் காண்பான். ருசித்து முதலியவைகளைச் செய்வான். ஆனல் தன்னிலேயே காண்பது முதலியவைகள் நிகழ்வதால் அவைகளைச் செய்வதும் போலாவான்.

ஆனல் விழிப்பு நிலையிலே அன்னியப் பொருள்களைப் பார்ப்பதால் காண்பது கேட்பது முதலியவைகள் எப்படிப் புலனகும்.

மரத்திலிருந்து பழுத்த மரம் விழுந்து மறுபடியும் புது சிவனை அடைவதுபோல, தேகம் பலஹீன மடைந்தவுடன் ஆன்மாவானவன் நீங்கி வேறு நிலயம் செல்லுவான். ஒரு அரசன் வரும்பொழுதும் மந்திரி முதலியவர்கள் அவனை அணுகி வணங்குவதுபோல், ஆன்மா தேகத்தில் வரும் பொழுதும் மற்றப் புலன்கள் எல்லாம் வந்து காணிக்கை செலுத்தும். இதுவே நான்காணும் ஆத்ம தரிசனம் என யாக்ஞவல்கியர் சொல்லி இன்னும் பல இரகசியங்களை அறிவித்தார் (பி. 4).

## 27. பிரமானந்த கதை

பிரமானந்தம் அனைத்திலும் பெரிய ஆனந்தமாகும். புவி ஆனந்தங்களில் எத்தனை ஆனந்தம் இணைந்தால் பிரமானந்தமாகும்?

சுகம், பொருள், தலைமை முதலியவைகளைப் பெறுவது மனிதரானந்தம். இத்தகைய 100 ஆனந்தங்களை உலகத்தை ஜயித்தவன் அனுபவிப்பான். இவ்வானந்தங்களின் 100 காந்தர்வ ஆனந்தமொன்ருகும். 100 கந்தர்வ ஆனந்தங்கள் ஒரு தேவ கந்தர்வானந்தமாகும். 100 கந்தர்வானந்தம் ஒரு பிதுருவின் ஆனந்தமாகும். 100 பிதுருக்களின் ஆனந்தம் ஒரு தேவரின் ஆனந்தமாகும். நூறு தேவர்களின் ஆனநதம் ஒரு இந்திரனின் ஆனந்தமாகும். 100 இந்திரனின் ஆனந்தம் ஒரு பிரஹஸ்பதியின் ஆனந்தம் 100 பிரஹஸ்பதியின் ஆனந்தம்ஒரு பிரஜாபதியின் ஆனந்தம் 100 பிரஜாபதி ஆனந்தம் ஒரு பிரமானந்தமாகும் (பி—தை.).

## 28. ஆன்ம இரகசியம்

ஆன்மா என தேகத்திலே யொருவனுண்டு. அவன் தேகத்தினின்று நீங்குங்கால் தேக மழியும். அவன் கண்ணினின்று நீங்குங்கால் வடிவமொன்றையும் பார்ப்பதில்லை. அப்பொழுது அருகிலிருப்பவர்கள் அவனை அணுகி இவன் இணைந்துவிட்டான். இவன் பார்ப்பதில்லை கேட்பதில்லை எனச் சொல்லுகிருர்கள். அவன் இந்த வைபவத்துடன் தேகம் நீங்குவான். ஒரு புழுவானது புல்முனையை அடைந்தவுடன் தன்னைச் சுருக்கிக்கொண்டு வேறு செடியில் குதிப்பது போல் ஆத்மாவும் தன்னைச்செய்துகொண்டு தாண்டுவான்.

தட்டான் தங்கத்தை புதியதா யடித்து பொன்னை அழ காகவும் புதுமையாகவும் செய்வதுபோல், ஆத்மாவானது தேகம் நீங்கி அறியாமையை அழித்து புதிய புதிய வடிவத் திலே பாய்வான்.

ஆன்மாவில் என்ன உண்டு?

ஆன்மாவில் பிரமமுண்டு. அறிவு, மனம் உயிர், கண், காது, புவி, நீர், காற்று, வானம், சோதி, இருள், விருப்பம், விருப்பமின்மை, கோபம், கோபமின்மை முதலியவைக ளுண்டு.

அவன் எதிர்காலத்தில் எப்படி யாவான்? அவன் செய் வதுபோ லாவான். நன்மை செய்தால் நல்ல புருஷனுவான். தீமை செய்தால் தீய புருஷனுவான்.

நன்மை புன்மையான செயல்களின் மூலம் எவை? விருப்பமேயாகும். மனிதன் என்பது விருப்பத்தின் வடிவமே யாகும். விருப்பம்போல் சங்கற்பமாகும். சங்கற்பம்போல் செயலாகும். செயலுக்கேற்றவாறு மனிதனுவான்.

இம்மூலத்தை நாம்நாடவில்லையானுல் நமக்காவ தென்ன? இம்மூலமான விருப்பத்தை நாம் நீக்கினுல் உண்மையான ஆன்ம சொரூபத்தில் சாய்வோம்.

இவைகளை நன்கு காண நமக்கு அவசியமான பொருள் எவை? அறிவே அத்தியாவசியமாகும். அதனுலேயே அவனைக் காணலாம். அவனை நமது தேகத்திலேயே நாடவும். அந்நி யப் பொருள்களி லிருப்பதாக எண்ணுதே. வாயினுலும் விதண்டா வாதத்தினுலும் அவனைக் காணமுடியாது.

அவனைப்பற்றி இன்ன முரைக்கவும்.

அவனுக்கு சன்மமில்லை. அறிவுமயமான அவன் இருத யாகாசத்திலுள்ளான். அவனே பூச்சக்கரவர்த்தியாவன். அவனை நான் எப்படி உரைப்பேன்? நேதி நேதி என நான்

மொழிவதைக் காட்டிலும் வேறு மொழி இருப்பதாக நான் எண்ணவே இல்லை. நேதி என்றால் எது சொன்னபோதிலும் அது இல்லை என்பதுதான். எனெனில் அவனைப் பற்றி நாம் சொல்லவே முடியாது. அவனுக்கு அழிவில்லை. அமுதமய மானவன். அவனை அறிபவன் அச்சமகன்றவனாகும். (பி-4. 4)

## 29. சிட்சை இரகசியம்

பிரஜாபதிக்கு மூன்றுமூன்று பிள்ளைகள். தேவர்கள், மனிதர்கள், அசுரர்கள் என அவர்களுக்குப் பெயர். அவர்கள் எங்களுக்கு எதை யாவது கற்பிக்கவேண்டுமென பிரஜாபதியி னிடஞ் சென்று வணங்கினார்கள். தேவர்களைப் பார்த்து தா எனவும், மனிதர்களுக்கும் அசுரர்களுக்கும் அதே மொழியைக் கூறினர். பிறகு அவர்கள் பிரஜாபதி சொன்னதை அறிந்து விட்டதாகக்கூறினார்கள். அடங்கி யிருக்கவும், தாமைளிக்க வும், தயையுடனாகவும் என அவர்கள் கற்றதாகக் கூறினார்கள்.

ஏன் ஒரு மொழியால் பற்பல விதமாய்க் கற்றார்கள்?

அவனவன் நிலைகுணங்களுக் கேற்றவாறே ஒருவன் கற் பான் (பி. 5—2).

## 30. கடவுள் கதை

மானசரோவரத்தினருகே வேத மகரிஷி யொரு வர் பலசிடர்களுடன் ஆனந்தமாய்ப் பேசிக்கொண்டிருந்தார். மாலைநேரம். அப்பொழுது சிறியவனொருவன் அவரை அணுகி-

கடவுள் எங்கே என வினவினான். பூமண்டலத்தி லுள்ள எல்லாப் பொருள்களிலும் அவர் நிறைந்துள்ளார் என விடையளித்தார்.

கடவுளின் குணங்களைப் பற்றி எனக்குரைக்க வேண்டுமெனச் சிறுவன் நமஸ்கரித்தான்.

ரிஷி—கடவுள் அசைந்தும் அசைவதில்லை. அருகிலாகி தூரத்திலுள்ளது. அனைத்துமான அகத்திலே மறைந்து புறத்திலேயுள்ளது. அது நிறைபொருள். சோதி. சரீரமில்லை. ஆபத்தனுகாதது. தசையற்ற புனிதப்பொருள். பாபமணுவுமில்லை. கவியாகும். மனோமன்னன். விரிந்தது. சுவயம்பூவாகும். நித்தியமாய் பொருள்களை அமைப்பது.

புவியிலே ஆன்மா ஆன்மாவெனச் சொல்லுகிறீர்களே? அவன் எங்கே என சிறுவன் வினவினான். அப்பொழுது செங்கதிர்களோடு கூடிய சிவந்த சூரியன் கீழே சாய்ந்தான். ரிஷியானவர் சிறுவனுக்குச் சமிக்ஞை செய்து சூரியனை நோக்கி, குழந்தையே, பொன்மயமான மூடியால் ஆன்மாவான சத்தியம் மூடப்பட்டுள்ளது. சத்திய திருஷ்டியுடன் மூடியைத் திறந்தால் உண்மை புலனாகும்.

சத்திய திருஷ்டிஎனச் சொல்லுகிறீர்களே! அசத்திய திருஷ்டியுண்டோ? அதைப்பற்றி விளக்கவும்.

அறியாமையை உபாசிப்பவனும், அறிந்தோம் என ஆவேசமுடையவனும், மூலப்பிரகிருதி தூலப்பிரகிருதியை உபாசிப்பவனும் காரியம் எனவோ காரணம் எனவோ என எண்ணுபவனும் சத்திய திருஷ்டி சூன்யமானவன். அவன் அந்தகாரத்தில் நுழைபவனாகும்.

சத்தியதிருஷ்டி யுள்ளவன் யார்?

அறிவு அறியாமையை இணைந்தறிந்து காரிய காரணத்தையும் நன்கறிபவன் அனைத்திலும் ஆன்மாவைக்கண்டு, ஆன்மாவிலே அனைத்தையுங் கண்டு எங்கும் ஒருமையைக் காண்பான். இவனையே சத்திய திருஷ்டியுள்ளவன் எனச் சொல்வது.

ஆன்மாவிற்கும் கடவுளுக்கும் நாம் செய்யவேண்டிய கடமை என்ன ?

உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் பற்றன்னியில் அனுபவிக்கவும். அன்னியர்களின் பொருளை ஒருபொழுதும் நாடாதே. இவைகளைத் தவிர வேறு எதையும் ஈசன் நம்மிடம் விரும்பவில்லை.

மரணத்திற்கு அப்பாலுள்ள நிலை எது ?

தேகம் அனலுடனாகும். மூச்சு காற்றுடனாகும். செயலுக்கேற்றவாறு சரீரத்தையும் சிந்தைக்கேற்றவாறு சன்மத்தையுமடைவாய்.

எனக்கு நல்வழியை யளிக்க நீங்கள துணைபுரிய வேண்டும்.

நான் எப்படித் துணைபுரிவது ? உன் தேகத்திலுள்ள அக்னியே உனக்குத் துணைபுரிவான். நீ அக்னியையே அணுகவும் எனக்கூறி பூர்ணமான பரம்பொருளை ஒருபொழுதும் மறக்காதே. ஏனெனில் அப்பூர்ணத்தினின்றே பூர்ணம் புலனாகும். அப்பூர்ணத்தினின்று பூர்ணத்தை எடுத்தால் பூர்ணமே நிற்கும் என சில மர்மமான மொழிகளை அருளினர். சிறுவனும் நமஸ்கரித்து மறைந்தான். (ஈசோபநிஷதம்.)

## 31. கேநோபநிஷதக் கதை

ஆதியிலே தேவர்கள் பரஸ்பரம் சண்டைசெய்து கொண்டார்கள். யார் பெரியவன் என்பதே அந்தச் சண்டையின் நோக்கம். போர் முடிந்தவுடன் பிரமமே பெரியவன் என்பதை உணர்ந்து அவனை வணங்கி ஜயகோஷம் செய்தார்கள். அந்தச் சரிதையே இக்கதையாகும்.

அனலும், காற்றும் தாங்கள் தான் பெரியவர்கள் என எண்ணி கர்வமுடனுனர்கள்.

அவர்களின் நடுவே பொன்மயமான ஒரு பெண்மணி தோன்றி அக்னியை அழைத்து நீ எப்படிப் பெரியவன் என வினவினுள்? நான் சகத்தையே விரும்பினல் எரித்து விடும் ஜாதவேதசன் என்றுன். சரி! நான் இதோ ஒரு காய்ந்தபுல் ஒன்றை அளிக்கிறேன். அதை எரிக்கவும் என அந்தப் பெண்மணி கூறினுள். அக்கினி அந்தப்புல்லை நாடினுன். எதிர்த்தான். எத்தனையோ முயன்றும் அதை எரிக்க முடியவில்லை. ஐயோ! என்னுல் அதை எரிக்க முடியவில்லையே என வெட்கமுடனுகி வணங்கினுன்.

உடனே அந்தப் பெண்மணி, வாயுவை அழைத்து நீ எப்படிப் பெரியவன் என எனக்குக் கூறவும் எனச் சொன்னுள். நான் உலகத்தையே துரிதமாய் அசைத்து அலைக்கச்செய்யும் மாதரிசுவான் எனப்படும் மேன்மை வாய்ந்த புருஷனே நான் எனக் கர்வமுடன் கர்ச்சனை செய்தான். சரி. இந்தப் புல்லை அசைக்கவும் என அப்பெண்விரும்பினுள். வாயு வானவன் புல்லை அசைக்க முயன்றுன். ஆட்டினுன், உருட்டினுன், புசலானுன். ஆனுல் புல் அசையவில்லை. உடனே காற்று வெட்கமுடனுகி, என்னுல் முடியவில்லையே! என்னை விடபெரியவன் ஒருவ னிருக்கவேண்டும்என வணங்கி வனிதையை நமஸ்கரித்தான்.

இருவர்களும் வனிதையை சாஷ்டாங்கமாய் இங்ஙனம் நமஸ்கரித்து, நாங்கள் நினைத்த எங்கள் ஜயமெல்லாம் தோல்வியாய்விட்டதே. இங்ஙனம் ஜயத்தையும் தோல்வியையு மளிப்பவன் எவன் என்பதை எங்களுக்கு அறிவிக்கவேண்டுமென பிரார்த்தனை செய்தார்கள். அதற்கு அவள் கூறியதாவது பிரம என ஒன்று உண்டு. அவன்

ஜயிப்பதையே நீங்கள் ஜயிப்பது என எண்ணுவது. அவன் வன்மையினால் காற்று அசைவான்; அனல் எரிவான்.

அவன் வன்மையை நாங்கள் எப்படிக் காண்பது? மின்னலைப்போல் இமைப்பொழுதிலே அவன் தோன்றி மறைவான். அவன் வன்மையை நீங்கள் இன்னம் நன்றாய் விளக்கவும். அவன் செவிக்குச் செவிவாகும், மனத்திற்கு மனமாவன். வாணிக்கு வாணியாவான். பிராணனுக்குப் பிராணனவான். கண்களுக்கு கண்ணவான்.

பிரமத்தைப்பற்றி நீங்கள் புகலும் விளக்கமே எங்களுக்கு சந்தேகத்தை அதிகரிக்கின்றது. இன்னம் சுலமாபய் விளக்கவேண்டும்? மொழியால் அவனை அறியோம், ஆனல் அவனலேயே மொழி மலரும். மனத்தால் அவனை நினைக்க முடியாது; ஆனல் மனம் அவனல் தோன்றும், கண், காதால் அவனைக் காணவும் கேட்கவும் முடியாது. ஆனல் கண் காது அவனலேயே காண்பதும் கேட்பதும். சுவாசத்தால் அவனை சுவாசிக்க முடியாது; ஆனல் அவனலேயே நாம் சுவாசிப்போம்.

அவனை எப்படித்தான் நாங்கள் அறிவது? மனம் தான் ஒருவேளை அவனை அறியச்செய்யலாம். அவன் யார்? எல்லா சிவராசிகளும் விரும்பப்பட்டவன் என்பதைத் தவிர நான் அவன் யார் என்பதை எப்படிச்சொல்லுவேன்?

அவன் எங்கே எப்படி நிலவுவான்? சிந்தனை செய்யாதவனிடம் ஒருவேளை சிந்தையாவான். சிந்தனை செய்பவனே அவனை நிச்சயமாய் அறிவதில்லை.

எப்படி அவன் புலனவான்? பிரதி போதத்தினலே.

அவனை அறிந்தவன் எவன்? நான் அறிந்தேன் என்பவன் அறிவதில்லை, அறியவில்லை என்பவன் அறிவான்.

அறியும் வழியையாவது கூறுவீர்களா? தபம், தமம், செயல், அவனை அறியும் நிலயங்கள். சாஸ்திரங்கள் அவன் அங்கங்களாகும். சத்தியமே அவன் இருப்பிடமாகும்.

(கேனோபநிஷதம்)

## 32. சிட்சை கதை

வி௳.—தித்திரியர் சிட்சையைப் பற்றிச் சொல்லிய வகை எத்தனை? விடை.—சிட்சைக்கு ஆறு பாகங்களுண்டு. அதற்கு எழுத்து, சுவரம், மாத்திரை, சாமன், சந்தானன் எனப் பெயராகும்.

வி௳.—புவியிலே அநாதியாக ஐந்து பரம் பொருள்கள் எனச் சிலர் சொல்வதுண்டு. அவைகளைப் பற்றிக் கூறவும். விடை.—அதிலோகம், அதிசோதிஷம், அதிவித்யம், அதிப் பிரஜை, அதியாத்மம் என்னும் ஐந்தே அவைகளாகும். அதி லோகத்திற்கு நிலம் பூர்வ ரூபமாகும். சோதி உத்தர வடிவ மாகும். ஆகாசம் அதன் சேர்க்கையாகும். வாயுவே அவர் கள் மகனாகும். அதிசோதிஷத்திற்கு அக்னி பூர்வ வடிவ மாகும். ஆதித்தியன் உத்தர வடிவம், சலமே சேர்க்கை யாகும். மின்னல் பிள்ளையாகும். அதிவித்தைக்கு ஆச்சாரி யனே பூர்வவடிவமாகும், சிடனே உத்தரவடிவமாகும். கல் வியே பிள்ளையாகும்; அறிவே சேர்க்கையாகும். அதிப் பிரஜைக்கு தாயே பூர்வவடிவம். தந்தை பின்வடிவமாகும். பிரஜையே சேர்க்கை. குழந்தைகளே மக்கட்களாகும். அத்யாத்மாவிற்கு மேலுதடே பூர்வவடிவம். கீழ் உதடே பின்வடிவமாகும். மொழியே சேர்க்கையாகும். நாக்கு சந் தானமாகும். இவைகளின் ஆதி அந்தத்தை ஒருவராலும் சொல்ல முடியாது.

வி.—மாணவர்கள் எப்படிக் கற்கவேண்டும்? விடை.—அக் கல்வியை தன்னந்தானக ஒருவன் பயிற்சி செய்தால் அது கனிந்து உண்மையை அறிவிக்கும். ஆச்சாரியரிடம் வழியை அறிந்து தானகவே பிறகு சிந்தனை செய்து முயற்சியிலாகி அறியவேண்டும். இதையே வடமொழியில் சுவாத்யாயம் என்பார்கள். இதுவே கற்கும் மார்க்கம். இதையே சத்தியம் தவம் எனச் சொல்வது.

வி.—நாம் எதை யெல்லாம் கற்கவேண்டும்? விடை.—இயல்பு, அதன் சட்டம், சத்தியம், தவம், அடக்கம், அனல், அதிதிகள், மனித சமூகம், பிரஜை மக்கட்கள் முதலிய எல்லா விஷயங்களையு மறியவேண்டும்.

வி.—அறிந்த பிறகு நமது கடமை என்ன? விடை.—அதை மற்றவர்களுக்கு மறிவிப்ப தவசியமாகும்.

வி.—உலகத்திலே உனக்கு நண்பனும் சத்துருவும் யார்? விடை.—நானே எனது நண்பனும் சத்துருவு மாவேன்.

வி.—மாணவர்களுக்கு நீங்கள் அளிக்கும் உபதேசம் எது? விடை.—சத்தியத்தைச் சொல்லவும், தர்மத்தை செய்யவும்! சுயமான பயிற்சியினின்று பிரியாதே, குருநாதருக்கு தட்சிணை அளிக்கவும். உனது சந்ததிகளைத் துண்டிக்காதே. சத்தியம், தர்மம், நற்செயல், ஐசுவரியம், பயிற்சி, கற்பனை, தேவர் பிதுரு செயல்களினின்று ஒருபொழுதும் பின்வாங்காதே. தாய் தேவதையாகும். தந்தையு மப்படியே. ஆச்சாரியனையும் அதிதியையும் தேவர்களாகவே எண்ணவும். நற்செயல்களையே நாடவும். தீச்செயல்களைச் செய்யாதே—குருநாதரின் நல்வழியையே நாடவும். புல்வழியை நாடாதே. பெரியார்களுக்கு மரியாதை அளிக்கவும். சிரத்தை, பயம் மரியாதை, கண்ணியமா யளிக்கவும். நான் சொல்லும் உபதேசங்களில் சந்தேகம்

தோன்றினால், அறிஞனாய், யுக்தா அயுக்தமறிந்து உற்சாகம் தர்ம சிந்தனையுள்ளவன் அந்நிலையில் எப்படிச் செய்வானோ அப்படியே நீயுஞ் செய்யவேண்டும்.

இதுவே ஆதேதசம். இது உபதேசம், வேதோபநிஷத மாகும் (தை. 1).

## 33. மனிதன் கதை

யஜுர்வேத மகரிஷி யொருவர் ஆத்மாவைப்பற்றிச் லிய கதையே இதுவாகும்.

பிரமம் என ஒன்று உண்டு. அது சத்தியம் ஞானம் அனந்த வடிவமாகும். இப்பிரமத்தினிருந்தே ஆத்மா தோன் றிற்று. ஆத்மாவினின்று ஆகாசம், ஆகாசத்தினின்று வாயு வும் வாயுவிலிருந்து அனலும், அனலிலிருந்து சலமும் சலத் திலிருந்து நிலமும், நிலத்திலிருந்து ஔஷதமும், ஔஷதத்தி னின்று உணவும், உணவினின்று புருஷனும் தோன்றினான்.

இந்த புருஷனை சற்று கவனித்தால் ஐந்து மயமான கோசமுடனிருப்பதாக அறியலாம்.அவை—அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம்.

அன்னமயமானவன் புறக்கவசமாகும். இவன் தலை, நமது தலையாகும். நமது இரு பக்கங்கள் அவன் பக்கங்களே யாகும். தேகமே ஆன்மா. அவன் நிலை உணவாகும்.

அன்னமயத்திற்கருகில் பிராணமய கோசமுண்டு. அவ னுக்கு பிராணனே தலையாகும் வியானன் அபானனே இரு பக்கங்களாகும். ஆகாசமே ஆத்மா. அவன் நிலையோ பூமி யாகும்.

மனோமயமானவன் என அதனகத்தில் ஒன்று உண்டு. அவன் சிரம் யஜுர்வேதம் ருக்கும் சாமனும் இருபக்கங்களா

கும். ஆதேசமே அவன் ஆன்மா அதர்வ வேதமே அவன் நிலை. அவனைச் சுற்றி விக்ஞானமயமான ஆன்மா ஒன்று உண்டு. அவனுக்குச் சிரத்தையே சிரமாகும். ருதமும் சத்தியமுமே இரு பாகங்களாகும். யோகமே அவன் ஆன்மா. அவன் நிலை மகத்திலாகும்.

விக்ஞானமயமான ஆன்மாவைச் சுற்றி ஆனந்தமயமான ஆன்மா ஒருவனுண்டு. அவனுக்குப் பிரியமே சிரமாகும் சுகமும் சந்தோஷமுமே இரு பக்கங்களாகும். அவன் ஆன்மா ஆனந்தமாகும். அவன் நிலையோ பிரமமாகும்.

வி:—இந்த ஐந்து பிரிவுகள் ஒருவனுக்குச் செய்யும் ஆதாயமென்ன? விடை:—இந்த ஐவர்களின் சக்திக்கேற்ற வாறே ஒருவன் சிறப்புடனுவான். ஒருவன் உணவு, பிராணன், மனம், விக்ஞானத்திலே ஒன்றுய் சிறப்பையும் செல்வாக்கையும் அடைந்த பிறகே ஆனந்தத்தில் செல்ல இயலும் ஆனந்தத்திலேயே ஈசன் நிலையைக் க்ாண்பான்.

வி:—இந்த ஐவகை கோசங்களின் வரலாற்றையும் அவைகளாலுண்டாகும் பயனையும் நீங்கள்சொல்லவேண்டும்? விடை:—உணவின் உதயத்தை உற்றுநோக்கவும், புவியிலுள்ள எல்லாப்பிராணிகளும் உணவினின்றே தோன்றும். உணவினுல் சிருட்டி செய்து வாழ்ந்து கடையிலே எல்லாம் உணவிலே செல்லும். உணவே உலகத்தில் மூத்தவனுகும். அதை சர்வ ஔஷதமெனச் சொல்வோம். உணவைப் பிரமமாக உபாசிப்பவன் உணவைப் பெறுவான்.

இனிப் பிராணனைப்பற்றிச் சொல்லுகிறேன். உயிரை நமக்கு அளித்த பிராணனுக்கே நாம் நன்றி யுள்ளவர்களாயிருக்கவேண்டும் பிராணனே பசு மனிதர்களின் ஆயுட்களாகும். இவனுக்கு சர்வாயுஷமெனப் பெயராகும். அதைப் பிரமமாக உபாசிப்பவன் நீண்ட ஆயுளைப்பெறுவான். அவன்

எல்லா சீவர்களின் வாழ்நாட்களாகையால் அவனுக்கும் சர்வாயுஷமெனப் பெயராகும்.

விக்ஞானமயத்தைப்பற்றி யுரைக்கவும் ?

விக்ஞானத்தால் யக்ஞம் வளரும். செயலும் செம்மையாகும். இதை பிரமமாக உபாசிப்பவர் ஒருபொழுதும் அவனிடமிருந்து திரும்புவதே இல்லை. அவர் நினைப்பவைகளில் நிலையாவார்.

இனி மனோமயமான கோசத்தைப்பற்றி நான் அதிகமாய் கூறுவதற்கில்லை.

பரமனை புலன் மனத்தினால் அறிய முடியாது. ஆனால் இம்மனத்தில் ஆனந்தமென்பதையும் ஒன்று சேர்த்து சந்தோஷ புருஷனாகலாம். இந்த சந்தோஷமான ஆனந்தத்தைப்பற்றி என்னால் அதிகமாய்க் கூற முடியாது. இதுவே உண்மையை அறிய உதவியளிக்கும். ஆனந்தத்தை பிரமமாக மனத்தில் எண்ணினால் பெரும் பதவியைப் பெறுவார்கள்

## 33.A எங்கும் உணவு

உணவைப்பற்றி நான் ஒருவாறு அறிந்துள்ளேன். ஆனால் உலகத்தில் எங்கும் அனைத்தும் பரஸ்பரம் உணவாகும் எனச் சொல்லுகிறார்கள். அதை எப்படி என நான் அறியவில்லை. அதை நீங்கள் அறிவிக்க வேண்டுமென தைத்திரியரை வினவியதற்கு அவர் சொல்லிய எதுவும் உணவு என்னும் கதையே இதுவாகும். இவ்வுடல் உணவுமயமென்பதை நீ அறிவாய். பிராணனையும் உணவு எனப் பெரியார் கூறுவார்கள். பிராணன் என்னும் உணவு சரீரம் என்னும் உணவில் நிலைத்துள்ளது. சலம் உணவு என்பதை நீ அறிவாய். சோதியும் உணவாகும், என சிறந்தோர் சொல்லுவார்,

கள். உற்று நோக்கினல் சோதியான உணவு சலம் என்னும் உணவை உண்டு சோதி சலத்திலும் சலம் சோதியிலும் நிலைத்துள்ளதாக அறிவாய். புவியும் ஆகாசமும் இப்படியே பரஸ்பரம் உணவாகும் புவி ஆகாசத்திலும், ஆகாசம் புவியிலும், நிலைத்துள்ளது. இங்ஙனம் எதை நோக்கியபோதிலும் உணவின் உயர்வையே அறிவோம். ஆதலால் நீ உணவைப் பெருக்கவேண்டும். அதற்கேற்ற முயற்சிகளை யெல்லாம் செய்யவும். நீ சற்று தியானஞ் செய்தால் நான் உணவு, உணவே நானகும், நான் உணவு, நான் உணவைப் புசிப்பவன், உணவைப் புசிப்பவன் நானே, நான் உணவு, உணவை உண்பவன் என்பதை அறிவாய். (தைத்திரியம்)

## 34. நான்கும் ஐந்தும்

உலகத்திலே நான்கு பெரிய மொழிகள் உண்டு. அதை காயத்திரியின் கனிந்த மொழிகள் எனச் சொல்லலாம். அதைபூ: புவ சுவ: மக: என்பார்கள். பூ என்ருல் இவ்வுலகம், அனல், ருக்வேதம், பிராணனுகும். புவ: என்ருல் ஆவ்வுலகம், காற்று சாமவேதம், அபானனுகும். சுவ: என்ருல் அவ்வுலகம், சூரியன், யஜுர்வேதம் வியானனுகும். மகத் என்ருல் சூரியன் சந்திரன் பிரமன் உணவாகும். பூ: புவ: சுவ: இங்குள்ள பொருள்களானல், மகத்தால் அனைத்துமாகி சோதியாகி வேதமாகி பிரமமாகும். இதைத் தான் நான்கென்பது. (தை. 5. 1)

எதை ஐந்து எனச் சொல்வது ? நிலம், அந்தரிட்சம், சோதி, திசை அந்தர்திசை ஒரு ஐந்தாகும். அக்கினி, வாயு ஆதித்தியன், சந்திரன், நட்சத்திரம் வேறு ஒரு ஐந்தாகும். சலம், ஔஷதி வனஸ்பதி ஆகாசம், ஆன்மா மூன்ருவது

ஐந்தாகும். இவைகள்தான் புறத்திலுள்ள ஐந்துகள். இனி அகத்திலுள்ள ஐந்தைச் சொல்லுகிறேன். பிராணன், வியானன், அபானன், உதானன், சமானன் இது முதன்மையான ஐந்துகள். கண், காது, மனம், வாக்கு, பரிசம் இரண்டாவது ஐந்தாகும். சர்மம், மாமிசம், நரம்பு, எலும்பு, தாது அகத்தின் மூன்றுவது ஐந்துகளாகும். (தைத்திரி. 1. 7)

## 35. பிருகுவின் கதை

ஆதியிலே வருணன் என ஒரு பெரியாரிருந்தார். அவருக்கு பிருகு என் ஒரு மகனுண்டு. மகன் தந்தையை அணுகி எனக்கு பிரமத்தை அறிவிக்கவும் என வணங்கினர். அதற்கவர், உணவு, பிராணன், கண், காது, மனம் மொழியே பிரமமாகுமென்றூர். பிறகு மகனை நோக்கி எவனிலிருந்து ஜீவர்கள் தோன்றி, பிறந்து வளர்ந்து அப்பால் எவனிடம் செல்லுகிறதோ அவனையே பிரமம் என அறிந்துகொள்ளவும் என பதிலளித்தார்.

மகன் தவஞ்செய்தான். தவத்தால் அவன் தெளிந்தாவது. உணவே பிரமன். ஏனெனில் உணவிலிருந்து எல்லா ஜீவர்களும் சனிக்கும். அதனுல் பிறந்து அவ்வுணவினுலேயே ஜீவனுடன் வாழும். இறந்த பிறகும் உணவிலேயே அவை செல்லும்.

இவ்வறிவுடன் தந்தையினிடஞ் சென்று இப்பொழுது அறிவிக்கவும் என வணங்கினுன்.

தவம் என்னும் சிந்தனையிலாகவும். உனக்கு நன்றுப்புலனுகும் எனக் கூறினர். மகன் திரும்பி மறுபடியும் தியானத்திலாகி பிராணனை பிரமன் என அறிந்தார். ஏனெனில் ஜீவர்கள் பிராணனிலேயே பிறந்து பிராணனிலே வளர்ந்து

பிராணனிலே மறையும். இதை அவர் தந்தையினிடஞ் சென்று கூறி இதுதானு பிரமன் என்ருர்.

மகனே! நீ இன்னும் தவஞ்செய்யவும். பிறகு புலனுகும் என்ருர்.

மகன் தவஞ்செய்து முதன்மையாய் மனத்தை பிரமம் எனவும் அப்பால் விக்ஞானம், பிறகு ஆனந்தத்தை பிரமம் என தவத்தால் அறிந்து தந்தையினிடஞ் சென்ருர்.

தந்தையே, ஆனந்தமே பிரமமாகும். ஆனந்தத்திலே சீவர்கள் தோன்றும். ஆனந்தத்தினுலேயே அவர்கள் வளர்வது. அவர்கள் மறைவது ஆனந்தத்திலேயாகும். ஆகலால் ஆனந்தமே பிரமமா யிருக்கவேண்டுமென்ருன்.

தந்தையும் தலையை அசைத்தார். (தைத்திரியம் 3).

## 36. முண்டக உபநிஷதம்

தேவர்களின் முதன்மையான பிரமன், தனது மகன் அதர்வணன், அவன் சத்தியவாஹபாரத்துவஜானுக்கும், அவன் அங்கிரஸுக்கும் இதை அறிவித்தான். அவரிடம் சௌனகர் அறிந்த அறிவே இது.

வித்தை எத்தனை ? பரம் அபரம் என இரண்டுண்டு. அபரவித்தை என்பது ருக்யஜுசாம அதர்வவேதம், சிட்சை கல்பம் வியாகரணம் நிருக்தம் சந்தஸு, சோதிஷமாகும். பரவித்தை என்பது அழியாப்பொருளான பிரமத்தைக்காண்பதாகும். பிரமத்தின் குணம் என்ன ? அதைக் காணமுடியாது, பற்றமுடியாது, அதற்குக் குலமில்லை ; சாதியில்லை ; கண் காது இல்லை; கைகால்களுமில்லை ; நித்யன், பிரபு, சர்வகதன் சூட்சமன், அழியாதவன். அவனே அனைத்திற்கும் மூலமாவன்.

சிலந்தி நூலைவிட்டு இழுத்துக்கொள்வது போல், புவியில் செடி, கொடிகள் முளைப்பதுபோல் தேகத்திலே ரோமம் தோன்றுவதுபோல்அவனிடமிருந்தே அனைத்தும் புலனாகும்.

அவன் தவஞ்செய்து பருத்து, அவனிடமிருந்து உணவு, சுவாசம் மனது சத்தியம் சகங்கள் பயன் முதலியவைகள் எல்லாம் தோன்றிற்று. (1)

ஆதலால் நாம் அவனை அணுகவேண்டுமானால் தவஞ் செய்வதவசியமாகும். தவஞ்செய்யுங்கால் அடியிற்கண்ட ஏழு அக்கினியை நாடுவதவசியமாகும். (1) காலி, கராலி, மனோஜவை, சுலோஹிதை, சுதூம்ரவாண, சுபுலிங்கனி, விசுவரூபி. (2)

அதுவுமன்னியில் இந்த உபநிஷத்தை வில்லாக எண்ணி பக்தி என்னும் அம்பினால் அழியாப் பொருளிலே குறிப்பு வைத்தடிக்கவேண்டும்.

ஓம் என்பது வில். தானே அம்பு. பிரமமே குறியாகும்.

இருதயத்திலுள்ள சந்தேகங்கள் ஒழிந்தால் அவனைக் காணலாம். (முண்டகம்)

## 37. மாண்டுக்ய கதை

யஜுர்வேத மகரிஷி யொருவருந்தார். அவரிடம் ஒரு மாணவன் மாலைப்பொழுதில் சென்றவுடன் அடியிற்கண்டவாறு அவர் உபாசனை செய்தார்.

தேவர்களே! நன்மைகளையே நாங்கள் செவியுற வேண்டும். திவ்யமானவைகளையே நாங்கள் பார்க்கவேண்டும். திரமான எங்கள் அங்கங்களினால் எங்குளுக்குரிய வாழ் நாட்களைக் கழிக்கவேண்டும். இந்திரனானவன் எங்களுக்கு

நன்மையையளித்து போஷிக்கட்டும். எப்பொழுதும் செல்லு பவனும் சொல்லிற்கதிபதியான அவன் எங்களுக்கு, நன்மை யையளிக்கட்டும்.

இந்த தோத்திர முடிந்தவுடன் சிறுவன் ஆத்மாவைப் பற்றி எனக்கு உரைக்கவேண்டுமென வணங்கினன்.

ஓங்காரமே அனைத்துமாகும். அழியாப்பொருளான அது திரிகாலமாகி அதற்கப்பாலுமாகும். ஓங்காரமான உலக மெல்லாம் பிரமமாகும். இவ்வாத்மாவே பிரமம். இவ்வான்மா விற்கு நான்கு பாதண்டு.

அவன் முதல் பாதத்தைச் சொல்லுகிறேன். அவன் விழிப்பு நிலை நிலமாகும். அதன் புறம் பிரக்ஞையாகும். அதற்கு ஏழு அங்கங்களும். முப்பத்திரண்டு முகங்களுமுண்டு. துலப்பொருள்களை உண்பான். இதுவே மனிதர்கள் எல்லாம் வசிக்குமிடமாகும்.

இரண்டாவது பாதத்தை கவனிக்கவும். கனவு நிலையே அவன் பூமியாகும். அகமே அவன் பிரக்ஞையாகும். ஏழு அங்கங்களும், (விசுவரூபம்,விசுவாநரன்,தேஜோமயன்,பிராண மயன், பிருதிவிமயன், உணவுமயன்; காலமயன்) பத்தொன் பது முகங்களுமுண்டு. (ஐந்து ஞானேந்திரியம், ஐந்து கர் மேந்திரியம் ஐந்து பிராணேந்திரியம், புத்தி, மனம், சித்தம், அகங்காரம்.) சூட்சமப்பொருள்களையே உண்பான். இவன் தேஜோமயமானவன்.

ஆழ்ந்த நித்திரையிலுள்ளவன் எதையும் விரும்புவ தில்லை. அவனுக்குக் கனவுமில்லை. இந்த சுஷுப்த ஸ்தான மான நிலயமே அவன் மூன்றுவது பாதமாகும். இந்நிலையில் பிரக்ஞானத்துடன் அவன் ஐக்கியமாயுள்ளான். ஆனந்தத்தை புசிப்பான். அவன் முகம் சிந்தனையாகும். இந்த பாதத்தை பிரக்ஞானமென சொல்வது.

நான்காவது பாதத்தைச் சொல்லுகிறேன் கவனிக்கவும்.

இந்நாலாவது பாதத்தில் அகம்புற பிரக்ஞை இல்லை. பிரக்ஞை அபிரக்ஞையைப்பற்றி ஒன்றுமே இல்லை. அதைக் காணமுடியாது. விளக்க இயலாது. கிரகிப்பதற்கில்லை. லட்சணமில்லை. சிந்தை கடந்தது. சொல்லமுடியாதது. தன்னுணர்வைத் தவிர வேறொன்றுமில்லை. சாந்தம், சிவம், அத்வைதம். இவனைத்தான் ஆன்மாவெனச் சொல்வது. அகாரமென்பது விழிப்பு நிலையும் அதன் சம்பந்தமுமாகும். உகாரமென்பது கனவு நிலையும் அதன் குணங்களுமாகும். மகாரமென்பது ஆழ்ந்த நித்திரையும் அதன் குணங்களுமாகும். ஆனால் நான்காவது பாதமான ஆன்மாவை எந்த மொழியினாலு முரைக்கமுடியாது.

சிறுவனும் ஓங்காரத்தை அறிந்து அதற்கப்பாலுள்ளதையுமறிந்தான்.

## 38. ஐதரேய பிரம கதை

ஆத்மாவொன்றே ஆதியிலிருந்தான். நான் சகங்களை புலனாக்கட்டும் என எண்ணினான். உடனே ஆகாசம் கிரணம் சலத்தை புலனாக்கினான். பிறகு சலத்தினின்று புருஷனை விளக்கினான். பிறகு புருஷனில் தவஞ்செய்தவுடன் அவன் வாய், மூக்கு, கண், சர்மம், அடி அங்கங்கள் முட்டைபோல் வெடித்து மொழி, பிராணன், காட்சி, சத்தம், மனம், அபானன், ரேதஸ்தோன்றி பிறகு அவைகளினின்று முறையே அனல், வாயு, சூரியன், திசை, செடிகொடி, சந்திரன், மிருத்யு, சலம் புலனாயிற்று.

இந்தப் பொருள்களான தேவர்கள் இந்தப் பெரும் மண்டலத்தில் புலனானதும் பசியும் தாகமும் அவர்களைப்

பற்றிற்று. அவர்கள் அவனை நோக்கி எங்களுக்கு நிலய மொன்று அளிக்கவும், அங்கு நிலேயாய் உணவு புசிக்கவிரும்பு கிறோம் என வணங்கினார்கள்.

அவன் உடனே அவர்களுக்கு பசுவொன்றைக்கொண்டு வந்தான். எங்களுக்கு இது போதாது என்றார்கள். உடனே குதிரை யொன்றைக்கொண்டு வந்தான். இதையும் விரும்ப வில்லை என்றார்கள். பிறகு மனிதன் ஒருவனை அளித்தவுடன் ஆகா! இதுதான் நாங்கள் விரும்புவது எனச்சொல்லி, அனல் மொழியாகி நாவிலும், காற்று பிராணனாகி மூக்கிலும், அப்ப டியே மற்றவர்கள் அவரவர் நிலயத்தில் நுழைந்தார்கள். உடனே பசி தாகம் பெரியவரை வணங்கி எங்களுக்கும் ஒரு நிலயமளிக்கவேண்டுமென விரும்பினார்கள். தேவர்களுக்கு அளிக்கப்படும் காணிக்கைகளில் உங்களுக்கும் பங்கு உண்டு என பிரமம் கூறினர்.

இது தான் நாம் அளிக்கும் காணிக்கையால் தேவர்கள் மாத்திரம் திருப்தியாகாமல்|பசிதாகமும் சாந்தத்தை அடை கிறார்கள்

பூலோகத்தையும் அதைப்பாதுகாப்பவர்களையும் நாம் சிருட்டி செய்துவிட்டோம். அவர்களுக்கு ஒரு உணவு வேண்டுமென எண்ணி பிரமன் சலத்தில் சிந்தனையானன். உடனே சலத்தினின்று உணவுதோன்றிற்று. உணவைமொழி யால் பற்ற முயன்றான். ஆனல் பற்றமுடியவில்லை. ஒரு வேளை பற்றியிருந்தால் நான் புசித்தேன் எனச்சொன்னமாத் திரத்திலேயே ஒருவன் திருப்தியாவான்.

பிறகு பிராணன், காட்சி, பரிசம், மனது, முதலியவைக ளால் பற்ற முயன்றான். முடியவில்லை, ஆனல் அபானனல் பற்ற முயன்றதும் அது பிடிபட்டுவிட்டது. இவனைத்தான் உண

வைப்பிடிப்பவன் என்பது. ஏனெனில் இவன் சிவன் உண விலாகும்.

பிரமம் இப்படி தேவர்களை நிறையச்செய்து சிருட்டி செய்தவுடன் நானன்னியில் இவன் எங்ஙனமிருப்பான், ஆத லால் நான் இவனகத்தில் நுழையவேண்டும். எனச்சிந்தனை யாகி கடைசியில் தலைவழியாக நுழைந்தான். இதுவே ஆனந்த நிலயமாகும்.

எனக்கு மூன்று நிலைகளுண்டு என மூன்று நிலைகளா னான். விழிக்குங்கால் இந்திரியஸ்தானமும் இடது கண்ணும், சொற்பனகாலத்தில் மனோ அகத்திலும், நித்திரையில் இரு தயத்திலுமானான்.

பிறகு இங்ஙனம் தோன்றிய பிரமம் உலகத்தை எல்லாம் உற்றுநோக்கினான். தேவர்கள் அவனைக்கண்டு கண்டும் காணாத பொருள் என ஆச்சரியமானார்கள். இக்காணாத பொருள்களில் அவர்களுக்குப் பிரியமாதலால் மறைபொரு ளான பொருள்களிலே அவர்களுக்கு ஆசையதிகம்.

(ஐதரேயம்—1-2-3)

## 39. வாம தேவர்

ஐதரேய உபநிஷத்தில் வாமதேவர் சொல்லிய கதையே இது.

உங்களுடைய முதல் ஜன்மத்தைப்பற்றி சொல்லு கிறேன். நீங்கள் செயல்களுக்குத் தகுந்தவாறு சந்திர லோகம் சென்று பிறகு மழை முதலியவைகளால் நிலத்தில் விழுந்து செடி முதலியவைகளிலாகி உணவாகி புசிக்கப்பட்டு அன்னமயமான ரேதஸாவீர்கள். இந்த ரேதஸானது உங்கள்

சர்வாங்கங்களின் இரசமாகும். இந்த ரேதஸானது புனிதமான விவாக காலத்தில் புலனுவதே முதல் ஜன்மமாகும்.

பிறகு அந்த ரேதஸை உங்கள் தர்மபத்னியானவள் கிரஹித்து அவளுடைய அங்கம் போலவே எண்ணுகிருள். அவளிடம் வந்த ஆத்மாவை பிறகு அவள் நன்ருய் பாது காப்பாள். பத்துமாதகாலத்திற்குப் பிறகு குழந்தையை சனனஞ்செய்வாள். அதுவே உங்களது இரண்டாவது ஜன்மமாகும்.

பிறகு புவியில் செயல்களையெல்லாம் செய்து புவி நீங்கி மறுபடியும் சகத்தில் பிறப்பதே மூன்ருவது ஜன்மமாகும்.

(ஐ. 2-4)

## 40. காத்யாயனன்

ஒரு காலத்தில் சுகேச பாரத்வாஜன், சைப்யசத்திய காமன், சௌர்யாயணி கார்கியன், கௌசல்பன் ஆசுவலாயன், பார்கவ வைதர்ப்பன், கபந்தின காத்யாயனன் முதலிய அறுவர் பிப்பலாதர் எனப்படும் மகரிஷியை அணுகி எங்களுக்கு உபதேசம் புரியவும் என வணங்கினுர்கள். உங்களுக்கு நான் எதைச்சொல்லவேண்டுமென்ருர். அதற்கு கபந்தின காத்தியானன் அடியிற்கண்டவாறு வினவி சந்தேகந் தெளிந்தான்:

வினு—இவ்வுலகத்தில் சிருட்டிகள் புலனுகும் வகையைப் புலனுக்கவும்? விடை—பிரமமே பிரஜையை விரும்பி தவமாகி பிராணன் உணவு என்னும் இருபொருள்களைச் செய்தார்

வினு—பிராணன் உணவு எவை என்பதை விளக்கவும்? விடை—சூரியன் சந்திரன் பிராணனும் உணவுமாகும். வடபாகம் பிராணனுகும், தென்பாகம் உணவாகும். சுக்லபட்சம் பகல் ரேதஸும் பிராணனுகும். கிருஷ்ணபட்சம், இரவு

பிரஜை உணவாகும். வினா—சூரியன் எப்படி பிராணன் போலாவான்? விடை—சூரியன் உதயத்திலேயே ஜீவராசிகள் உணர்வைப் பெறும். அவனே வைசுவாநரன். எல்லா வடிவ முதலியவைகளை அளிப்பவன். இதனாலேயே அவன் அனைத்தின் பிராணன் போலாவான். வினா—"அவன் பாதை எது?" "வடபாதையாகும்." "அதை எப்படி நாம் அடையலாம்?" "தவம் வித்தை பிரமசரியம் ஆன்ம ஞானத்தால் அடையலாம்." "உத்தராயணத்தில் (வடபாதை) யார் செல்லுவார்கள்." அமுதமான, அச்சமற்ற ஜீவர்கள். அதுவே பெரிய நிலயம்." "அந்த நிலயம் எங்ஙனமிருக்கும்?" "அது ஐந்து பாதம் (பருவம்) 12 வடிவங்களுடனிருக்கும்." சிலர் ஏழு, ஆறு பற்களுடைய சக்கரம் என்பார்கள். "பகல் எப்படிப் பிராணனாகும்?" "ஏனெனில் பகல் சேர்க்கையால் பிராணனறிகின்றது." "தென்பாதையைப்பற்றிச் சொல்லவும்?" "தட்சிணாயனம் சந்திரன் பாதை. பிரஜைகளை விரும்புபவர்கள் அப்பாதையால் செல்லுவார்கள். பிரம நிலயமெங்கே? தவமும் பிரமசரியமுமிருக்கும் நிலயமே பிரம நிலயமாகும்.

(பிரசி. 1)

## 41. பார்கவர்

வைதர்பி பார்கவன் அடியிற்கண்டவாறு வினவி சமாதானமடைந்தான்.

பிரஜைகளை எத்தனை தேவர்கள் பாதுகாக்கிறார்கள்?

ஆகாசம், வாயு, அக்னி, சலம் நிலம்,வாக்கு, மனம் கண், செவி என்னும் பலதேவர்கள். இவைகளைவிட வேறு தேவர்களுண்டோ? இவர்களே புலனாகும் தேவர்களாகும். இவர்களில் சிறந்தவர் யார்? பிராணனாகும். எப்படி? ஒரு

சமயத்தில் பிராணன் தேகத்திலிருந்து நீங்கியதும் மற்றவர்களும் நீங்க நேர்ந்தன. அவன் சேர்ந்ததும் மற்றவர் களும் இணைந்தார்கள். ராணித்தேனி எழுந்தால் மற்ற ஈக்கள் எழுந்து அவள் செல்லும் வழியெல்லாம் செல்லும். அப்படியே பிராணனுகும். அவன் அனலைப்போல் உஷ்ணமளிப்பான், சூரியனுய் மழையளிப்பான். அவனே காற்று நிலம் முதலியவைகளாகும். நாபியிலே பற்களைப்போல் எல்லாம், வேதம் யக்ஞம் க்ஷத்ரம் பிராமணன் அவனிலே சாய்ந்துள்ளார்கள். அவனே பிரஜாபதியாகி கர்ப்பத்தில் சஞ்சரித்து, பிறந்து வளரச்செய்வான். அவனே அவிஷாகி எடுத்துச் சென்று, ருத்திரனைப்போல் பாதுகாத்து எங்கும் செல்பவனுவன். அவனே மழையாகி, இனி நமக்கு உணவு உணவு என உலகததை உற்சாகமாக்குவான். அவனே விராத்யன், ஒரே ரிஷி. எதையும் புசித்து பெருமையாயுள்ளவன். அவனே, மொழி, காது, மனத்தில், நிலைத்து மேன்மை யளிப்பான். அவனே முவ்வுலகத்திற்கு அதிபதியாகி தாயைப்போல் காத்து ஐசுவரியம் ஞானத்தை அளிப்பான். (பிரசி. 2)

## 42. ஆசுவாலயனர்

பிராணன் யார் என்பதை அறிந்துவிட்டோம். ஆனுல் எப்படி அவன் வேலைகளைச் செய்கிறுன் என்பதில் எனக்குச் சந்தேகம் நீங்கவில்லை. பிப்பலாதரையே நான் வினவி அறிந்துகொள்வேன் என ஆசுவாலயனர் பெரியாரை வணங்கி பிராணன் தோன்றுவதெப்படி? என வினவினுன். ஆத்மாவினின்றே பிராணன் தோன்றுவான் என பெரியார் பதிலளித்தார்.

சரி, இந்த தேகத்தை எப்படி அடைவோம்? என ஆசு வலாயனர் வினவியதற்கு நம்மைப்போல் எப்படி நம்முடைய நிழல் தோன்றுகிறதோ அப்படியே ஆன்மாவின் சாயையைப் போலவே தேகமாகும். தேகத்திலே ஆன்மா வருவது மனோ செயல்களாலாகும்.

தேகத்திலே எப்படி அவன் பலபாகங்களாய் பிரிவான்? ஒரு அரசன் இராஜ்யபரிபாலனம் செம்மையாய்ப் புரிய ஒவ்வொரு வேலைக்கும் ஒவ்வொரு தலைவனை வைப்பதுபோல் ஆன்மா தன்னுடைய செயல்களைப் பலர்களுக்குப் பங்கு பிரித்து அளித்துவிடுவான்.

அவன் எப்படிப் பிரித்து அரசு புரிவான்?

அபானத்தால் அடி அங்கங்கள், பிராணத்தால் கண் காது வாய் மூக்கு, முதலியவைகளை நடத்துவான். நடுவிலே தான் சமானனாயிருந்துகொண்டு நிலைப்பான். இவனே உணவு களை எங்கும் பரவச்செய்து எழு சுடராவான். நடுவென்பது இருதயமாகும். அங்கு நூற்றுக்கணக்கான நாடிகள் மூலமாய் தன் வியானைப்பரவச் செய்வான்.

அவன் எப்படிச் செல்லுவான்.

உதானன் என்னும் பிராணத்தால், புண்ணியமானால் புண்ணிய உலகத்திலும் பாபமானால் பாப உலகத்திலும் செல்லுவான். அவ்விரண்டினாலுமே மனிதர் உலகத்திலா வான்.

வினா—பிராணன் எத்தனை வகையாம்? விடை—அத்தியாத் மிகம் அதிதெய்வீகம் என இருவகையாகும். வினா—இவை களுக்குள்ள சம்பந்தங்களை அறிவிக்கவும். விடை—சூரியன், நிலம், ஆகாசம், தேஜஸன் முதலியவைகளேயே அதிதெய்வீகப் பிராணன் எனச்சொல்வது. தேகத்திலுள்ள பிராணன்களையே அத்யாத்மிக .பிராணன்கள் எனச்சொல்வது. அவைகளுக்

கான சம்பந்தங்களைச் சொல்லுகிறேன். சூரியனே கண்களுக்கு அத்யாத்மிகப் பிராணனை அருள் செய்வான். நில தேவதை அபான சக்தியை எல்லாமளிப்பாள். ஆகாசமே இரண்டையும் சமமாக்கி வியானன் என்பவனை அருள் செய்வான். தேஜஸானவன் உதானத்தை தேகத்திற்கருளுவான். வினு—மரிக்குங்கால் தேகத்திலே முதன்மையாய் அழியும் பிராணன் எது? விடை—உதானனே முதன்மையாய்ச் செல்லுவான். உதானன் செல்லுவதென்பது தேஜஸஸன் செல்லுவதாகும். வினு—தேஜஸன் செல்லும்பொழுது இந்திரியங்கள் எங்கு மறையும்? விடை—இந்திரியங்கள் எல்லாம் மனத்தில் இணையும். வினு—தேகத்தினின்று செல்லுவதெப்படி? விடை ஒருவன் நினைக்கும் நினைவோடு பிராணத்திலாகி, பிராணன் தேஜஸனுடன் சேர்ந்து ஆத்மாவோடு இணைந்து தான் நிர்மாணஞ் செய்துள்ள உலகத்திற்குச் செல்லுவான். வினு—இதை அறிவதாலாகும் ஆதாயமென்ன? விடை—இதை அறிவதால் ஒருவன் அமுதமாவான். (பிரசி. 3)

## 43. கார்க்கியர்

பிப்பலாத மகரிஷியை நமஸ்கரித்து கார்க்கியர் தனது சந்தேகங்களை அடியிற் கண்டவாறு தெரிந்து கொண்டார்.

வினு—ஒருவன் நித்திரையில் உண்மையாய் உறங்குவது எவர்கள்? விடை—ஒருவன் தூங்குங்கால் கண் காது முதலிய புலன்களே உண்மையாய்த் தூங்குகிறார்கள். இதனாலேயே தூங்குங்கால் ஒருவன் காண்பது கேட்பது முதலியவைகளில்லை.

வினு—புலன்கள் அப்பொழுது செல்வ தெங்கே? புலன்

கள் எல்லாம் மனத்திலே சென்று மறையும். எப்படி? சூரிய அஸ்தமத்திலே கிரணங்களிலே சேர்ந்து மறைவது போலாகும். சூரிய னுதயத்திலே கிரணங்கள் தோன்றுவது போல் விழிக்குங்கால் மனத்தினின்று புலன்கள் மறுபடியும் எழுச்சியாகும்.

வினு:—உறங்குங்கால் விழித்திருப்பவர் யார்? பிராணுக்னியே விழித்திருக்கும். இந்த பிராணுக்னியே ஐந்தாகும். அதற்கு பிராணன், அபானன், வியானன், சமானன், உதானன் எனப் பெயர். இதை கிரகஸ்தர்கள் அன்வஹறனீயம், கார்ஹபத்யம், அன்வஹாரியம், தட்சிணுக்னி இஷ்டப் பிராப்தி எனச் சொல்வதுண்டு. இவர்களை நமது தேகத்தில் எங்கு காணலாம்? பிராணன் என்பது நமது தேகத்தில் எப்பொழுதுமுள்ள நிலையான மூச்சாகும். அபானன் வெளி மூச்சாகும். வியானன் என்பவன் வியாபகஞ் செய்பவனுவான். சமானன் சமம் செய்யும் சுவாசமாகும். உதானன் யஜமானனுக்கு இஷ்ட பலத்தை அளிக்கும் உயரிய வாயுவாகும்.

வினு:—கனவுகளைக் காணுமதிகாரி யார்? கனவுகளைக் காணுமதிகாரி மனமேயாகும். தன்னுடைய மேன்மையான இந்த மனம் கண்டதையும், கேட்டதையும், அனுபவித்ததையும், அனுபவிக்காததையும், அது அனைத்துமாகையால் எதையும் பார்க்கின்றது. வினு:—இந்த தேகத்திற்கு ஆனந்தமுண்டாவதெப்படி? விடை:—தேஜஸினுல் இந்த மனத்தை ஜயித்தால் அப்பொழுது கனவு தோன்றுவதில்லை. அந்த வெற்றியை அடைவதே ஆனந்தமடையும் வழியாகும். வினு.—இந்த ஆனந்தமெல்லாம் யாரைச் சேர்ந்தது? விடை:—ஆத்மாவைச் சேர்ந்தது. வினு:—இந்த ஆன்மாவிலே நிலைத்துள்ளதை யெல்லாம் சொல்லவும்? புவியிலுள்ள

பட்சி பறவைகள் எல்லாம் தனது கூட்டில் சேர்வதுபோல் இந்த ஆன்மாவிலே நிலையாகும். நிலம் அதன் சூட்சமம் சலம் அனல், காற்று, ஆகாசம் கண், காது, மூக்கு கைகால் மொழி, சுகம், மனம் முதலியவைகளும், புத்தி, அஹங்காரம் சித்தம், தேஜஸன் பிராணனும் அதன் பொருள்களும் நான் எனச் சொல்லும் விக்ஞானமயமான புருஷர்களும் அவனிலே சாய்ந்துள்ளார்கள். அந்த ஆன்மா யார்? அவனே காண்பவன் கேட்பவன் முதலியவனுகும். அதை அறிபவன் அனைத்துமாகி அமுதமாவான் எனக் கூறி கார்க்கிருயனுக்கு சந்தேகமழித்தார். அவனும் வணங்கி மரியாதையுடன் மௌனமானுன். (பிரசி. 4).

## 44. சைப்ய சத்தியகாமன்

ஓங்காரமே உலகத்தில் உயர்ந்ததாகும் என்ன சனங்கள் சொல்லுகிருர்கள். இந்த ஓங்காரத்தை தியானஞ் செய்வதாலுண்டாகும் நன்மையை நீங்கள் உரைக்கவேண்டுமென பிப்பலாதரை சைப்ய சத்தியகாமன் நமஸ்கரித்து வினவினுன். அதற்கு பிப்பலாதர் அடியிற் கண்டவாறு பதிலளித்தார்.

ஓங்காரம் என்ருல் பரம் அபரப் பிரம்மமாகும். இதை உபாசிப்பவன் பரத்தையோ அபரத்தையோ அல்லது இரண்டையுமடைவான் ஓங்காரத்தின் ஒருமாத்திரையை உபாசனை செய்பவன், அனைத்தையுமறிந்து மனிதர்களில் மேன்மையுடனுவான். மேன்மையாவதற்குக் காரணம் ருக்குக்களும் தவமும் பிரமசரியமுமாகும். இரண்டாவது மாத்திரையை உபாசனை செய்பவன், யஜுர்வேதத்தால் மனோ உலகத்தில் சேர்ந்து அந்தரிட்சமணைந்து சோம சகத்தில் ஐசுவரிய மனுபவித்து மறுபடியும் திரும்புவான். இதை மூன்று மாத்

திரைகளோடு உபாசனை செய்பவன் சாமனால் சூரிய உலகம் சேர்ந்து பாம்பு தன் சட்டையைப் பிரிப்பதுபோல் தன் பாவங்களைக் களைந்து பிரமலோகஞ் சென்று சிவனின் கடல் கடந்து தன்னையே திவ்யமாய் எங்கும் நோக்கிக்கொள்வான்.

இம் மூன்று மாத்திரைகளால் மிருத்யுவினிடம் சேர்ந்த போதிலும், அவைகளை நன்கு அறிந்தால் அச்சத்தினின்று நீங்குவான். சாந்தம் அசரம் அமுதமான அபயபரத்தை ஓங்கார மறிந்தவன் அறிவான். இதுவே ஓங்காரத்தின் மகிமையாகும். (பிரசி. 5)

## 45. பாரத்துவாஜர்

பாரத்துவாஜர் பிப்பலாதரை நமஸ்கரித்து, ஒரு மனிதன் பதினாறு கலைகளாகப் பிரிந்துள்ளான் எனச் சொல்லுகிறார்கள். அவனுக்கு அதை அளித்தது யார். இன்னம் அதைப்பற்றிய அனைத்தையும் அறிவிக்கவும் என வினவினர்.

அதைச் செவியுற்று பிப்பலாதர், பிரமன் என ஒன்று உண்டு என உனக்குத் தெரியும். அவன் நான் பொருள்களில் எப்படிச் சேர்வது என நினைத்தான். இங்ஙனம் நினைக்குங்கால் அவனிடம் அதற்குறிய நாமத்தையும் வடிவத்தையும் இழந்து தான் சுய ரூபங்களை மறந்தான். ஆனால் இப்பதினாறும் பிராணன், சிரத்தை, வானம், வாயு, சோதி, சலம், நிலம், இந்திரியம், மனம், அன்னம், வீர்யம், தவம், மந்தரம், செயல், உலகம், பெயர் சேர்ந்து மனிதன் என்னும் பெயரை அடைந்தான். மனிதன் எனச் சொன்ன மாத்திரத்திலேயே இப்பதினாறும் நமது ஞாபகத்திலாகும் என விடையளித்தார்.

இப்பதினாறும் தங்கள் நாமத்தையும் வடிவத்தையும் எப்படி மறந்தன என்பதை விளக்கவும்?

சமுத்திரத்திலே பல நதிகள் விழும். ஆனால் சமுத்திர நீருடன் நதி ஜலம் சேர்ந்தவுடன் ஒவ்வொரு நதியும் தன் பெயர் வடிவத்தை மறந்துவிடும். நான் இந்த நதியின் நீர் என எந்த சலமும் சொல்வதற்கு இயலாது. அங்ஙனமே மனிதனில் பதினாறும் சேர்ந்து தம்மையே அறிவதில்லை.

மனிதனின் இவ்வுண்மையை அறிந்தவன் ஒருபொழுதும் மரணத்திற்கு அஞ்சுவதில்லை. உடனே பாரத்வாஜன் கீழே வீழ்ந்து வணங்கி நீங்கள் உண்மையாய்ப் பெரியவரே என துதி செய்தான். (பிரசி. 6.)

## 46. நசிகேதஸன்

வாசசிரவன் என ஒருவனிருந்தான். அவனுக்கு பதவியிலும், கற்புகழ்ச்சியிலும் பிரியமதிகம். சுயநலத்தை உத்தேசித்தே அவன் எந்தச் செயல்களையும் செய்வது வழக்கம். அவன் ஒரு சமயம் பெரிய யக்ஞமொன்று செய்தான். யக்ஞத்திலே தானமும் தட்சிணையும் எளியவர்களுக்கு அளிப்பது கடமையாகும். அவனும் தானமும் தட்சிணையும் வழங்கினான். ஆனால் அவன் சில பசுக்களை தானஞ் செய்யுங்கால், கிழட்டுப் பசு, மலட்டுப் பசு, உதவாத பொருள்களையெல்லாம் தட்சிணை என பற்றவர்களுக்களித்தான். இதைக்கண்டு மனஞ் சகியாமல் அவன் மகன் நசிகேதசன், அப்பா! நீ ஏன் இப்படி வஞ்சக தானம் செய்கிறாய் என தந்தையைக் கண்டித்தான். உடனே தந்தை கோபமுடனாகி, உன்னையும் யாருக்காவது அளித்து விடுவேன் என ஆவேசமுடனானார். மகன், இவர் கோபத்திற்குக் கடுகளவும் அஞ்சாமல் என்னை எவ

ருக்கு அளிக்கப்போகிறாய் என வற்புறுத்தவே, தந்தை உடனே அவனை எமனுக்களித்து விட்டான்.

நசிகேதசன் எமபவனம் சென்றான். ஆனால், அங்கு அப்பொழுது எமன் வெளியில் சென்றிருந்தபடியால் மூன்று நாள் காத்திருந்தான். பிறகு எமன் வீடு திரும்பியதும், உபவாசத்துடனிருந்த அதிதியான நசிகேதசனை நோக்கி சாந்தமளித்து, என் வீட்டில் மூன்றுநாள் காத்திருந்த உனக்கு மூன்று வரங்களை அளிக்கிறேன். எது வேண்டுமானாலும் விரும்பவும் என்றார். என் தந்தை கோபம் நீங்கி, நான் திரும்பியவுடன் சந்தோஷமாய் என்னை வரவேற்க வேண்டுமென சிறுவன் வணங்கினான். எமன் அந்த வரத்தை அளித்தார்.

பயம் அணுவுமில்லாத சுவர்கத்திற்குச் செல்லும் வழியை எனக்கு அறிவிக்கவேண்டும். இதுவே நான் இரண்டாவதாய் விரும்பும் வரமாகும் என நசிகேதசன் விரும்பினான். எமன், அவர் சுவர்க்கத்தை அறிய அனல் ஒன்றே அற்புத வழியாகும் எனச்சொல்லி, அதன் இரகசியங்களை எல்லாமறிவித்து, இனி மூன்றாவது வரத்தை விரும்பவும் என்றார்.

மரணத்திற் கப்பாலுள்ள நிலை என்ன? ஆன்மாவென்பதென்ன? பரமாத்மாவைப் பற்றியும் சொல்லவேண்டும். இதுவே நான் மூன்றாவதாய் விரும்பும் வரம் என நசிகேதசன் வணங்கினார்.

எமன், இதைத்தவிர வேறு எந்த விருப்பத்தையு மளிப்பேன், எனச் சொல்லியும் நசிகேதசன் எதையும் விரும்பாமல், இந்த அறிவை நாடுவதிலே பிடிவாதமானான்.

நசிகேதசனே! மரணமென்பது தேகத்தினின்று நாம் நீங்கும் நிலையைச் சொல்வார்கள். ஆனால் ஆன்மாவெனச்

சொல்லப்படும் நமது சீவர்களுக்கு மாணமே இல்லை. அவை நித்தியமாகும். புராதனமாகும். நமது சீவர்களான ஆன்மாக்களை நான் எப்படிச் சொல்வது? நமது இந்திரியங்களில் பெரியன சூட்சம இந்திரியங்களாகும். சூட்சம இந்திரியங்களில் சிறந்தது மனமாகும். மனத்திற்கு மேன்மையானவன் புத்தியாகும். புத்திக்கு வழி காட்டியாகி அதற்குப் பெரியவனுயுள்ளவனையே நாம் ஆத்மா எனச் சொல்லுகிறோம். இனி பரமாத்மாவைப்பற்றி கவனிக்கவும். பரமாத்மாவிற்கு ஓங்காரமெனப் பெயர். அவனை உலகத்திற்கெல்லாம் ஒரு புருஷனுகும். எப்படி ஒரு அனல் நெருப்பாகி நமது உணவைச் சமைத்து, அக்கினிபாகி நமக்குச் சீரணத்தை அளித்து இன்னம் பல வேலைகளைச் செய்கின்றதோ அப்படியே அந்த ஒரு புருஷனை பரமாத்மா பல வடிவங்களாகி பற்பல வேலைகளை இப்புவியிலும் எங்கும் செய்கிறன். அவன் எல்லாப் பொருள்களிலும் பதிந்தும் புலனுவதில்லை. ஏனெனில் அவனில் சப்தமில்லை; வடிவமில்லை; அழிவில்லை; உருசியில்லை; மணமில்லை; ஆதியந்தமில்லை.

அவனை நான் எங்கு காணலாம்? அவனைக்காண நீ ஊரெல்லாம் சுற்றவேண்டாம். அவன் ஏதோ வெளியிலிருப்பதாக அலைவது அனுவசியம். உன்னுடைய இருதயத்திலேயுள்ள ஆகாசத்திலே நீ அவனைக்காணலாம். ஆனல் நீ அவனை அறிய மிகவும் கஷ்டப்படவேண்டும். அதை நான் எப்படிக் காண்பேன்? நீ உன் மொழியை மனத்திலும், மனத்தை ஞானத்திலும், ஞானத்தை ஆத்மாவிலும் செலுத்தி ஆத்மாவால் அவனை அனுசுமுபற்சித்தால், நீ சந்தேகமன்னியில் காணலாம் என அவனுக்கு இன்னம் பலவிளக்கங்களுடன் கூறினர். சிறுவன் உடனே பெரியாரை நமஸ்கரித்து வீடு திரும்பி சுகவாழ்க்கையிலானுன். (கடோபநிஷதம்.)

## 47. உத்கீத கதை

ஆனந்தமாய் இமயமலை வனத்தின் நடுவிலே கானஞ் செய்து கொண்டிருந்த மகரிஷி யொருவரை சிறுவன் ஒரு வன் அணுகி உத்கிதமான (ஓங்காரம்) என் உலகங்களில் உயர்ந்தது? என வினவினன். அதற்கு மகரிஷியானவர் உத்கிதமான ஓங்காரம் சாமவேதத்தின் சாரமாகும். சாம வேத மென்பது ருக்குக்களின் இரசமாகும். ருக்குக்கள் என்றால் மொழிகளைக் கடைந்தெடுத்த வெண்ணெய் என் பார்கள். மொழி என்பதோ மனிதர்களின் அமுதமாகும். மனிதர் யார் என மனனம் செய்தால் செடி கொடிகளின் சாரம் என நீ அறிவாய். செடி கொடிகள் சலத்தின் சத் தாகும். சல மென்பது நிலத்தின் சாறு போலாகும். நிலமே உலகிலுள்ள அனைத்தின் சாரமாகும். இந்த எல்லாப பொருள் களின் சாரமே மறுபடியும் உத்கிதமாகும். இதனாலேயே இதை உயர்ந்ததென்பார்கள்.

உத்கிதம் என் உயர்ந்தது என்பதற்கு வேறொரு கார ணமுமுண்டு. நாம் எதையாவது விரும்பினால் அதை அறி விக்கும் வாஹனத்திற்கு உத்கிதமெனப் பெயர். வாஹன மென்பது மொழியும் சுவாசமுமாகும். இதை இணைத்து நாம் நமது விருப்பத்தை அறிவிப்பது உத்கித வன்மையினாலே யாகும். ஆதலால் அனைத்திலும் சிறந்த நமது விருப்பத்தை அறிவித்து அளிப்பதால் உத்கீதத்திற்கு உயர்ந்த பொருள் எனப் பெயராகும்.

வினா:—உத்கிதத்தை ஆதியில் தேவர்கள் எப்படி அறிந் தார்கள்? விடை:—ஆதியிலே தேவர்கள் உத்கிதத்தைப் பற்றிவிட்டால் அசுரர்களை ஜயித்து விடலாமென எண்ணி அவனைத் தேடலானார்கள். அவனை நாசியிலுள்ள சுவாசத்

தில் காணலாமென சென்றதும் அசுரர்கள் அங்கு தோன்றி கெட்ட கந்தத்தைப் புலனுக்கவே, நாசி உத்கீத மில்லையென அறிந்து நா, கண், செவி, மனம் முதலியவைகளை என ஒவ்வொன்றுப் நாடினார்கள். அங்கும் அசுரர்கள் தோன்றி கடுஞ்சொல், கொடுங்கண், கடுஞ்செவி, கெட்ட சித்தத்தால் அவைகளை எதிர்க்கவே, தேவர்கள் இவர்களும் உத்கிதமில்லை என அறிந்தார்கள். சரி, இனி அபானனே உத்கிதமாயிருக்க வேண்டுமென அவனை (வாயிலே) அணுகியதும், அசுரர்கள் அவனையும் எதிர்க்க முயற்சி செய்தவுடன் சுவரில் அடிபட்ட மண் உருண்டைபோல் கீழே விழுந் மறைந்தார்கள் உடனே தேவர்கள் அபானனே உத்கீதமென அறிந்து அவனை உபாசனை செய்தார்கள்.

வினு:—இவன் ஏன் பெரியவன்? விடை:—இவன் வாயினின்று சென்றுவிட்டால், எனக்குத் தின்பதற்கு ஒன்றுமில்லையே எனக் கடைசிக் காலத்தில் ஒருவன் வாயைத் திறந்து மரிப்பான். இதனாலேயே இவன் பெரியவன். மறுபடியும் மொழி என்னும் பிரஹதிக்கு, பதி எனப்படும் இச்சுவாசமே தலைவனாவதால் இவனுக்கு பிரகஸ்பதி என்னும் பெரிய பெயராகும். ஆஸ்யா எனப்படும் வாயினின்று இவன் வருவதால் இவனுக்கு அயாஸ்யா என்றும் பெரிய பட்டமு முண்டு. (சா—1—1—2)

## 48. காணும் வழி

உத்கீதமெனவும் உயர்ந்த கான மெனப்படும் ஒப்பில்லாத பொருளை நான் எங்கு பார்ப்பது என வினவியதற்கு உபநிஷதமகரிஷி உரைத்த இரகசியமே இதுவாகும்.—

(1) நீ காணும் சூரியனே உத்கீதமாகும். அவன் காலையில் எழுந்தவுடன் எல்லா ஜீவராசிகளும் நீயே பெரியவன் என அவனுக்கு உயரிய கானம் செய்கிறார்கள். (2) நமது வாயிலுள்ள சுவாசத்தையும் உத்கீத மென்பார்கள். இவன் சூரியனைப்போல் சரீரத்திற்கு உஷ்ணமளித்து காப்பாற்றுவதால் இவனையும் உயர்ந்த கானமென்பார்கள். (3) வியானனை காற்றில் இவனைக் காணலாம். வியானன் என்பது, பிராணன், அபானன் சேர்ந்து பயனாகும் நிலையாகும். அதனால் தோன்றுவதே மொழியாகும். இந்த மொழியை ருக்கு என்பார்கள். (4) பிறகு இவனை, எங்குவன்மை அதிகமாகப் புலனாகின்றதோ அங்கு காணலாமென மகரிஷிகள் கூறுவார்கள். (5) உத்தான சுவாசம், சுவர்கம், சூரியன், சாமவேதம், கீ யெனப்படும் மொழி, வானம், காற்று, யஜுர் வேதம், தா எனப்படும் உணவு, நிலம், அனல், ருக்வேத முதலியவைகள் கீதமாவதால், இவ்வனைத்தையும் உத்கீத மென இன்னம் சில பெரியார்கள் கூறுவார்கள். (சா 1-3-4)

வினா :—உத்கீதத்தை நான் எங்கு நிச்சயமாய் பார்ப்பது? என மாணவன் மறுபடியும் வணங்கினான். விடை :—உன்னைப்போல், தேவர்களும் மிருத்யுவை அழிக்கும் உத்கீதத்தை எங்கு இருப்பான் என நாடி, சரி, வேத மந்திரங்களிலே என எண்ணி அவைகளால் மரணம் பிரிய தங்களை மறைத்துக் கொண்டார்கள். ஆனால், அங்கு செம்படவன் மீனைக் காண்பதுபோல் மிருத்யுவானவன், தேவர்களைக் கண்டதும் அவர்கள் அஞ்சி, நடுநடுங்கி, ருக்கு, யஜுர், சாம வின்று நீங்கி அட்சர மென்னும் அழியாப் பொருளான சுவரத்திலே சாய்ந்து, அச்சம் நீங்கி அமுதமானார்கள். நீ அந்த நிச்சயமாய்க் காணலாம். இவனுக்குப் பிரணவன் எனவுஞ் சொல்வார்கள். அவனைத் தேடுங்கால் இந்தப்

பெயரையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவும் என பெரியார் சொன்னவுடன் மாணவனும் சற்று அறிந்தான்.

(சா—1—3—5)

## 49. ஜயம் பெறும் வழி

சிவனுடனிருக்குங்கால் நீ ஜயத்தை அடையவேண்டுமானால், சூரியனிலுள்ள பரிபூரண பொன்மயமாயுள்ள எல்லாத் தீமைகளினின்றும் உயர்ந்துள்ள நீலத்ததாமரைக்கண்களுடன், அதற்கப்பால் சிறந்துள்ள உத்கீதனை யறிந்தால் நீ ஜயம் பெறும் வழியை அறிவாய் என சாமகானரிஷி சொல்லியதைச் சிறுவன் சொல்லி அவர் எப்படி யிருப்பார் என வினவினர். அவனுக்கு ருக்கு, சாமன் என்னும் இரண்டு அங்கங்களுண்டு என்றார்.

ருக்கு, சாமன் என்றால் என்ன, அவைகளை நான் எப்படி அறிவது?

ருக்கு என்றால் நிலம், வானம், சுவர்கம், நட்சத்திரம், வெண் சூரியன் முதலியவைகளுக்குப் பெயர். சாமன் என்றால் அனல், காற்று, சூரியன், சந்திரன், கருமை சூரியன் முதலியவைகளுக்குப் பெயர். சாமன், ரிக்கில் சாய்ந்துள்ளதாகச் சொல்வார்கள். ஆனால் சாந்தமாய்க் கூறினால், ருக்கு வென்பதையும் சாமன் எனவே சொல்லவேண்டும். இவ்விரண்டு மிணைந்த தேவாம்சத்திலுள்ள இவ் வுண்மைகளை அறிந்தால் நீ உத்கீதமறிந்து ஜயம் பெறலாம். இனி தேகத்திலேயுள்ள ருக்கு, சாமனைச் சொல்லுகிறேன் கவனிக்கவும் என மகரிஷி விளக்கியதாவது:—

ருக்கு என்றால், மொழி, கண், மனம், வெண்ணிறக்கண், கண் புருஷன்; சாமன் என்றால் சுவாசம், சாயாத்மா, சித்

தம், கருங்கண், கண்ணிலுள்ள புருஷனுகும். சாமன்கள் எல்லாம் ருக்கில் சாய்ந்துள்ளதால், இவைகள் இணைந்து இலங்குவதே சாமனுன உத்கீதனுகும். கண்ணிலுள்ளவும், சூரியனிலுள்ளவும், பூமண்டலத்தின் அதிபதியான இது எனப்படும், அது எனப்படும் விருப்பத்தின் தலைவனுன உத்கீதனை அறிபவர்கள் ஜயத்தைப் பெறுவார்களெனக்கூறி சிறுவனை ஆசிர்வாதஞ் செய்தார். (சா-1-6-7)

## 50. மூன்று ரிஷிகள்

ஆதிகாலத்தில் சிலக சாலாவத்தியர், சைகிதாயனதால்பியர், பிரவாஹண ஜைவலியர் உத்கீதத்தைப்பற்றிச் சந்தேகமுடனுகி அடியிற் கண்டவாறு தெளிந்தார்கள்.

சாலவத்தியர், சைகிதாயனரை நோக்கி உத்கீத சாமனின் ஆதாரமெங்கே என வினவினர். அவர் சுவரமென்றுர். சுவரத்தினுதாரவு எது? சுவாசமென்றுர். சுவாசத்தின் மூலம் எது? உணவு. உணவின் மூலமெங்கே? சலமாகும். சலத்தினுதாரம் எது? சுவர்கம். சுவர்கத்தினுதாரவு எது? சுவர்கத்திற்கப்பால் செல்லாதே, அதையே உத்கீத சாமனுக எண்ணவும் என்றுர். அதற்குச் சாலவத்தியர் உங்கள்சாமனுக்கு நிலைபான நிலயமில்லையாதலால், நீங்கள் சரியாய்ச் சொல்லவில்லை என்றுர்.

அப்பால் சைகிதாயனர் அடியிற்கண்டவாறு சாலவத்தியருடன் பேசினுர் :—

வினு—சுவர்கத்தினுதாரவு எங்கே? விடை—இவ்வுலகமாகும். வினு—இவ்வுலகத்தினுதாரவு எங்கே? விடை—இவ்வுலகத்திற்கப்பால் செல்லவேண்டாம். இவ்வுலகத்திலேயே

சாமன் சாய்ந்துள்ளபடியால், இதற்கே உத்கீத சாமன் என மறுமொழி யளித்தார்.

பிரவாஹ ஜைவல்லியர் இவைகளைச் செவியுற்று சைகிதாயனரே! நீர் சொல்வதும் பிழை எனச் சொல்லி, இவ்வுலகத்தின் ஆதாவு ஆகாசமென்றூர். ஆகாசத்திலின்றே அனைத்தும் தோன்றும். அவனே புராதனனுகும். அவனிடமே அனைத்தும் சாய்ந்துள்ளதால் அவனுக்கே உத்கீத சாமன் எனச் சொன்னர். மற்ற இருவர்களும் உண்மையை அறிந்து ஆனந்தமுடனுனர்கள். இதையே அதிதன் வான சௌனகர் உதாரண சாண்டிலுக்கு ஒரு சமயம் உரைத்து இந்த உத்கீதத்தைப் புகழ்ந்தார். (சா. 1-8-9)

## 51. உஷஸ்தி சாக்ராயணர்

இப்யகிராமம் என்னும் சிறிய ஊரிலே உஷஸ்த சாக்ராயணர் என்னும் பெரியவர் ஒருவர் வெகுகாலமாக சுகமாய் வாழ்ந்துவந்தார். ஆனல் பெரிய பஞ்சமொன்று ஒரு சமயம் ஏற்படவே உணவிற்காக அவர் ஊர் சுற்றலானர். இப்படிச் சுற்றுங்கால் செல்வமிருந்த ஒருவனைக்கண்டு எனக்கு ஏதேனும் உண்பதற்கு அளிக்கவும் என வினவினர். அவர் நான் தின்று மிகுதியாயுள்ள எச்சிலான அவரைக்காயைத் தின்பதாயிருந்தால் தருகிறேன் என்றூர். சாக்ராயணர் சம்மதிக்கவே அவரையை அளித்து இதோ சலத்தையும் பருகவும் என வணங்கினர். அதற்குச் சாக்ராயணர் எனக்கு உயிர் நீங்கும் போலிருந்ததது, அதற்காக எச்சிலான அவரையையும் தின்றேன். ஆனல் சலம் என்னுடைய இன்பத்திற்காகவே நான் வேண்டுவதால் எச்சிலான சலத்தைப் பருகலாகாது என மறுத்து வீடு சேர்ந்து, மனைவிக்கு மிகுதியான அந்த

அவரையை அளித்தார். அவள் அதை அப்பொழுது தின்னு மல் மறுதினம் புருஷனுக்கே அளித்து எதாவது பொருள் சேகரித்து வரவும என அவரை வெளியிலனுப்பினுள்.

அவர் வெளியில் சென்று அருகிலுள்ள நகரமொன் றிலே அரசன் யாகஞ்செய்வதைக்கண்டு யக்ஞசாலையில் உத் கீதகானம்செய்யும், பிரஸ்தோத்திரி, உத்காத்திரி, பிரதிஹர்த் திரி என்னும் புரோகிதர்களைக்கண்டு நீங்கள் நாடும் தேவர் கள் யார் என வினவினுர். அவர்கள் விடையளிக்கச் சக்தி யற்று உஷஸ்தரையே வணங்கினுர்கள். அதற்கு உஷஸ்த சாக்ராயணர் 1. பிரஸ்தவதேவர் பிராணனுகும். உலகிலுள்ள வைகள் எல்லாம் பிராணனிடமிருந்தே புலனுகும். 2. உத் காத்ரியன் தேவர் சூரியனுகும. எனெனில் சூரியன் உச்சி யிலானுல் ஜீவராசிகள் எல்லாம் அவனைத் துதிசெய்யும். பிரதிஹாத்திரியை நோக்கி 3. பிரதிஹார தேவதை உண வாகும். அவனிடமிருந்தே அனைத்தும் தோன்றும். அவ னுக்கு மஹிமை அதிகமாகும் எனக்கூறி சந்தேகந்தீர்த்தார். இச்சந்தேகமுடன் அறியாமல் நீங்கள் கானஞ்செய்திருந்தால் விபத்தில் வீழ்நதிருப்பீர்களென அறிவித்ததும், அவர்கள் பெரியவர் காலில் வீழ்ந்து மறுபடியும் நமஸ்கரித்தார். அரச னும் இதைக்கண்டு உஷஸ்த சாக்ராயணருக்கு வெகுமதி யளித்து அனுப்பினுன். அவரும் மிகமிகப் பொருளுடன் வீடு சேர்ந்து மனைவியுடன் உத்கீதஞானத்தால் இன்பமாய் வாழ்ந் தார். (சா. 1-10-0)

## 52. பகதால்ப்யர்

பகதால்ப்பர் என வேதரிஷி யொருவரிருந்தார். அவ ருக்கு தன்னந்தனியாக ஒரு இடம் சென்று வேதத்தை மன

னஞ் செய்வதிலே பிரியமதிகம். அப்படி ஒரு தினம் மனனஞ் செய்யுங்கால் வெள்ளை நாயொன்று அவர் முன் தோன்றிற்று. அந்த வெள்ளை நாயைத் தொடர்ந்து, அநேக நாய்கள் வரிசையாய் ஒன்றின் வாலை மற்றொன்று கௌவிக்கொண்டு நாங்கள் பசியுடனுள்ளோம்; எங்களுக்கு உணவு அளிக்கவும் என ஹிங்கார கானஞ்செய்தன. கானஞ்செய்து சற்று அமைதியானவுடன் நாம் உண்போம், நாம் பருகுவோம் என வருணனை, பிரசாபதியை, சாவித்திரியைத் துதிசெய்து சந்தோஷமாய்ப் பருகி, புசித்து ஒங்காரம் முழங்கிற்று.

பகதால்ப்யர் இதை யெல்லாம் கவனித்து தியானமாகி ஒப்பில்லாத உத்காத்திரிக்கு ஹௌ, ஹை, அத, இஹ, இ, உ, எ, ஔ, ஹீம், ஸ்வரம், ய, வாக்கு, ஹூம் என 13 சத்தங்களுண்டு. இவைகளுக்கு ஸ்தோயம் எனப்பெயர். அவைகள் முறையே நிலம், காற்று, சந்திரன், ஆத்மா, அனல், சூரியன், விகவன், விசுவதேவன், பிரஜாபதி, சுவாசம், உணவு, விராடன், பிரமாகும் என அறிந்து, இதன் உண்மையை அறிந்தால் வாக்கு பாலை அளிக்கும். பால் என்பது மொழியின் இரசமாகும் என உணர்ந்து, இதை அறிபவன் எப்பொழுதும் உணவிற்குக் கஷ்டப்படப் போவதில்லை எனத்தெளிந்தார். (சா. 1-12-13)

## 53. சாமன் கதை

சாந்தோக்ய மகரிஷி யொருவரை சிடன் ஒருவன் அணுகி சாமன் என்றால் என்ன என வினவினன். நன்மையெல்லாம் சாமனாகும். ஒழுக்க மெல்லாம் சாமன் எனப்படும் என விடை யளித்தவுடன் :—

சாமன் ஐந்து வகைப்படும் என நான் செவி யுற்றுள்

ளேன். அவைகளைப் பற்றி எனக்கு நன்றாய்க் கூறவேண்டும் என சிறுவன் வினவினான். அதற்கு மகரிஷி மொழிந்ததாவது—

ஹிங்காரம், பிரஸ்தவம், உத்கிதம், பிரதிஹாரம், நிதனம் என சாமனுக்கு ஐந்து பிரிவுகளுண்டு. இந்த ஐந்து பிரிவுகளும் ஒன்று சேர்வது ஒரு சாமனாகும். (1) நிலம், அனல், வானம், சூரியன், சுவர்கம், உலக சம்மந்த சாமனாகும். (2) மழையிலுள்ள சாமனின் பிரிவுகளாவது:—காற்று, மேகம், மழை, மின்னல், மழை நிற்பதாகும். (3) சலம் சேர்வது, மழை பொழிவது, கிழக்கில் செல்லுவது, மேற்கில் செல்லுவது, விரிந்த கடல், சலத்திலுள்ள ஐந்து சாமன் பிரிவுகளாகும். (4) பருவங்களிலுள்ள சாமனின் ஐந்து பிரிவுகளாவது:—வசந்தம், கிரீஷ்மம், வர்ஷருது, சரத்ருது, ஹேமந்தமாகும். (5) வெள்ளை ஆடு, செம்மறி ஆடு, பசுக்கள், குதிரைகள், மனிதர்கள் மிருகங்களிலுள்ள சாமனின் ஹிங்காரம், பிரஸ்தவம், உத்கிதம், பிரதிஹாரம், நிதனமெனப்படும் ஐந்து பிரிவுகளாகும். (6) கந்தம், மொழி, காட்சி, கேட்பது, மனமே பிராணனிலுள்ள சாமனின் ஐந்து பிரிவுகளாகும். சாமனை மேற்சொன்ன எந்த வழிகளில் உபாசனை செய்தபோதிலும், அதற்கேற்ற பயன்களான உலகங்கள், ஐசுவரியம், சலச்செல்வம், ஜயமுழக்கம், பசுபட்சிகள், பெரும்பொருளை யெல்லாம் முறையே ஒருவன் அடைவான்.

வினா:—ஏழுவித சாமனுண்டு எனச் சொல்லுகிறார்களே? அவைகளைப்பற்றியும் சொல்லவும்?

விடை:—மொழியிலே ஏழு நிலைகளுண்டு. தினந்தோறும் சூரியன் ஏழு நிலையில் ஏறி இறங்குவான். இவைகளையும் சாமனின் ஏழு நிலை பிரிவு என்பார்கள்.

வினு:—இன்னும் வேறுவிதமான சாமன்களுண்டோ? அவைகளின் பயன்களையும் உரைக்கவும்.

விடை:—காயத்திரியிலே ஐந்து வகையான ஹீங்காரம், பிரஸ்தவம், உத்கீதம், பிரதிஹாரம், நிதனம் என ஒரு சாமனுண்டு. அதுதான் மனம், மொழி, காட்சி, கேள்வி, சுவாசம் எனச்சொல்வது. பிராணனிலே இழைக்கப்பட்ட இந்த காயத்திரிசாமனை அறிந்து, கர்வமன்னியிலிருந்தால் நீண்ட ஆயுள் ஐசுவரியத்தையுமடைவான். 2. அனலிலுள்ள ரதாந்தகார சாமனை மூட்டுவது, புகை கிளம்புவது, நெருப்பு எரிவது, சுடர், கனல், அணைவது, அணைந்துவிட்டதென இந்த ஐந்துசாமனின் பிரிவை அறிபவர்கள் பலமுடனுவார்கள். ஆதலால்அனலை ஒருபொழுதும் நிந்திக்காதே. 3. தாய், தந்தை,மகன், தொடர்ச்சியையும் சாமன் எனச் சொல்வதுண்டு. 4. தினந்தோறும் தோன்றும் சூரியனின் பகல் ஐந்து நிலைகளை பிரஹத்சாமன் எனவும், எப்பொழுதாவது தோன்றும் மழையான ஐந்து நிலைகளை பர்ஜனிலிழைக்கப்பட்ட வைரூபசாமன்எனவும் பருவங்களில் ஐவகையாயிழைக்கப்பட்டவனை வைராக சாமன் எனவும் சொல்வார்கள். இவைகளால் ஒருவன் எல்லா ஐசுவரியங்களையும் பெறுவான். ஆகலால் இவைகளை ஒருபொழுதும் நிந்திப்பது உசிதமில்லை. 5. உலகிலிழைக்கப்பட்ட சாமனுக்கு சக்கர்ய எனவும், மிருகங்களிலிழைக்கப்பட்டவனுக்கு ரேவதிசாமன் எனவும், தேகத்திலே இழைக்கப்பட்ட சாமனுக்கு (ரோமம், சர்மம், மாமிசம், எலும்பு, உள் எலும்பு) யக்ஞ சாமன் எனவும், தேவதைகளிலே (அனல், காற்று, சூரியன், நட்சத்திரம், சந்திரன்) இழைக்கப்பட்ட ஐவகை சாமனுக்கு ராஜன்ய சாமன் எனவும், எங்குமிழைக்கப்பட்ட ஐந்து பிரிவான சாமனை [(அ) மூன்று அறிவு, (ஆ) மூன்று உலகம், அனல்,

(இ) காற்று, (ஈ) சூரியன், நட்சத்திரம், பட்சிகிரணம், (உ) பாம்பு, கந்தர்வன், பிதுருக்கள்)] எங்குமுள்ள சாமன என உபாசிப்பவன் உலகங்களை ஜயித்து, பசு, பட்சி, பிரஜைகளை அடைந்து, திட அங்கமுடனாகி, தேவர்களைப்போல் திறமாகி எங்கும் அனைத்துமாவான். ஆதலால் இவைகளை ஒரு பொழுதும் இலேசாய் மொழியவேண்டாம். (சா. 2-1-2)

## 54. சப்த கதை

உத்கீதத்திற்கு எழு சுவரங்களுண்டு. மிருகங்களுக்குரிய ஆழ்ந்த குரல் அனலைச்சேர்ந்தது. பிடிபடாத சுவரம் பிரஜாபதியினுடையதாகும். குறிப்பான நாதம் சோமனைச்சேர்ந்தது. மிருதுவான மெல்லிய ஓசை வாயுவிற்குச் சொந்தமாகும். மெல்லிய, வன்மையுள்ள குரல் இந்திரனுடையதானால், பிரகஸ்பதிக்கு பட்சியின் குரல்போலாகும். மந்தமான ஒசை வருணனுடையதாகும். வருணனை ஒருபொழுதும் அப்பியாசஞ்செய்யாதே.

சுவரங்கள் (உயிர் எழுத்து) எல்லாம் இந்திரனைச்சேர்ந்தது. உஷ்மானம் பிரஜாபதிக்குரியது. மெய் எழுத்துக்கள் மிருத்யுவினுடையதாகும். உயிர் எழுத்துக்களை எல்லாம் கோஷஞ்செய்யவும். அதனால் இந்திரன் வன்மையைப்பெறுவான். உஷ்மாணத்தை விளக்கமாயுரைக்கவும். அதனால் பிரஜாபதியினிடம் ஒருவன் செல்லுவான். மெய் எழுத்தை மெதுவாயுரைக்கவும். அதனால் மிருத்யு வினிடமிருந்து வெகு தூரம் நீங்குவான். (சா. 2-2-2)

## 55. பெரிய தர்மம்

சாமவேதத்தை நன்றாய் அறிந்த மகரிஷி யொருவரை இளங்குமாரன் ஒருவன் அணுகி தர்மத்தைப்பற்றி எனக்கு விளக்கமாக்கவும் என நமஸ்கரித்தான். அதற்கு மகரிஷி அத்யயனம், தானத்தோடு கூடிய யக்ஞத்தை மூன்று காலங்களில் செய்யவேண்டுமென்றார்.

வினு:—மூன்று காலமும் தினந்தோறும் நாம் ஏன் யக்ஞத்தைச் செய்யவேண்டும். எவரை நாடி யக்ஞஞ் செய்ய வேண்டும்?

விடை:—நாம் காலையில் யக்ஞம் வசுக்களுக்காகவே செய்கிறோம். ஏனெனில் நாம் பூமண்டலத்தின் இரகசியத்தை அறிந்து அதை நாம் அரசு புரியவேண்டும். அதற்கு நமக்குத் துணையாயிருந்து உதவி செய்பவர்கள் வசுக்களேயாகும். பகலில் செய்யும் யக்ஞம் உருத்திரனுக்காகும். அவனே வான தேவதையாகையால், அவன் வான இரகசியத்தை அறிவித்து, நம்மை வானத்தை அரசுபுரியச்செய்வான். மாலையில் செய்யும் யக்ஞம் விசுவதேவர்களுக்காகும். அவன் சுவர்கத்தின் இரகசியத்தை நமக்கு அறிவித்து, அதன் அரசனாக நம்மைச் செய்வான்.

வினு:—இதற்கு அதிகமானபெரிய தர்மமுமுண்டோ?

விடை:—உண்டு. பிரமசாரியாய் ஆச்சாரியகுலத்தில் வசிப்பது இதைவிடப் பெரியதாகும். ஆனல் ஆச்சாரியருக்குப் பணிவிடைசெய்து, அவரை அணுகி, எல்லா இரகசியங்களையுமறிவதே முதன்மையான தர்மமென்றார். சிறுவனும் வணங்கி உண்மை அறிந்தான். (சா. 2-23-24)

## 56. சூரியனும் வேதமும்

சூரியனுடைய சிறப்பைச் சொல்லுகிறேன் என சாம கான ரிஷி சொல்லியதாவது:— சூரியனை தேனைப்பற்றி நான் வாயால் எப்படிச் சொல்லி முடிப்பது? அவன் எல்லா தேவர்களின் தேன் அமுதம்போலாவான். சோதி உலகம், அந்தரிட்சமான தேன் கூண்டைத்தாங்கும் உத்தரத்திலிருந்து கொண்டு தன் சோதியான ஆவியை தேனீக்களின் மக்கள் கள் போல் புலனுக்குவான்.

அவனுக்கு கிழக்கில், தெற்கில், மேற்கில், வடக்கில் ஐந்து வகை கிரணங்களுண்டு.

கீழ்த்திசை கிரணங்களே முன்னணியிலுள்ள மதுநாடி அல்லது பீஜங்களாகும். ருக்குக்கள் தேனீக்களாகும். ருக் வேதம் (யக்ஞம்) மலராகும். யக்ஞசலமே புஷ்பங்களின் அமிருதமாகும். தேனீக்களைப்போல் ரிக்குக்கள், ரிக்வேத மான மலரிலே தவஞ்செய்ததும் அந்த புஷ்பத்தினின்று கீர்த்தி, பெரும்புகழ், இந்திரியம், வீர்யம், உணவு என்னும் ரசம் தோன்றிற்று. அந்த ரசம் சூரியனை நோக்கிச்சென்று, சூரியனிலுள்ள சிகப்புடன் சேர்ந்தது.

அப்படியே தெற்குதிசை கிரணங்களில் யஜுர் தேனீக் களும், மேற்கு திசையிலே சாம தேனீக்களும், வடக்குத் திசையில் அதர்வதேனீக்களும், உயரிய கிரணங்களிலே, மர்ம ஆதேசமெனப்படும் தேனீக்களும், யஜுர்வேதம், (யக்ஞம்) சாமவேதம், அதர்வவேதம், பிரமம் என்னும் மலர்களில் யக்ஞசலமெனப்படும் புஷ்பரசத்துடன் தவஞ்செய்து, ஒவ் வொன்றும் யசஸ், தேஜஸ், இந்திரியம், வீர்யம், அன்னம் முதலியவைகளை இரசமாகப் பாயச்செய்து மறுபடியும் சூரி

யனின் வெண்மை, கருமை, கடுங்கருமை நடுவிலாகும் புருஷனைச் சேர்ந்தன.

அதாவது சூரியனிலுள்ள நிறங்கள் எல்லாம், எல்லா சத்துக்களின் சத்தாகும். அப்படியே வேதங்களும் எல்லா சத்துக்களின் சாரமாகும். வேதம் அமுதமாகும். சூரியன் அதன் சாரமாகும். (சா. 3-1-5)

## 57. தேவர் நிலயம்

ஆதியிலே தேவநிலயத்தைப்பற்றி அதற்கப்பாலுள்ள திவ்யமான அமுதத்தைப்பற்றியும், ஹிரண்யகர்ப்பர் பிரஜாபதிக்கும், பிரஜாபதி மனுவிற்கும், மனு இட்சுவாகு முதலியவர்களுக்கும் கூறி லட்சக்கணக்கான வருடங்களாய் அறிஞர்களால் சொல்லப்பட்டு வரும் கதையே இதுவாகும். இக்கதையை அவர்கள் திடீரென ஒருவருக்கும் சொல்வதில்லை. இதை பக்குவஞ் செய்யப்பட்டு, உழுத நிலம்போலுள்ள, கேட்பதற்குரியவனான மாணவனுக்கே சொல்வது வழக்கம். ஆனால் நான் இதை பகிரங்கமாய்ச் சொல்லிவிடுகிறேன்.

பிரபஞ்சத்திலே வசுக்கள், ருத்திரர்கள், ஆதித்தியர்கள், மருதர்கள், சாத்தியர்கள் எனப் பலதேவர்களுண்டு. சூரியனிலுள்ள சிகப்பு நிறத்திலே அக்கினியைத் தலைமையாய்க் கொண்டு வசுக்கள் கீர்த்தி, தேஜஸ் முதலியவைகளின் அமுதமான சிகப்பு நிறத்தை எப்பொழுதும் பார்த்தவண்ணமாகவே ஆனந்த சாகரத்தில் அமிழ்ந்துள்ளார்கள். ஏனெனில் தேவர்கள் புசிப்பதில்லை, பருகுவதில்லை, ஆனால் அமுதத்தைப் பார்த்துக்கொண்டே திருப்தியாவார்கள்.

சூரியனிலுள்ள வெள்ளை நிறத்தில் இந்திரனைத் தலைவ

னைக்கொண்டு உருத்திரர்களும், கருப்பு நிறத்திலே வருண னைத் தலைவனாகக்கொண்டு ஆதித்தியர்களும், கருங்கருப்பிலே சோமனைத் தலைவனாய்க் கொண்டு மருதர்களும் சாய்ந்து, முறையே அந்த அமுதமான நிறங்களின் காட்சியைக் கண்டே ஆனந்தமாகிறார்கள். ஏனெனில் தேவர்கள் புசிப்ப தில்லை, பருகுவதில்லை, அமுதக்காட்சியைக் கண்டே ஆனந்த மாவார்கள்.

எந்த எந்த நிறத்தை ஒருவன் நாடுகிறானோ அதற்குரிய தேவர்களிலொன்றாகி அவர்களைப்போல் அங்கு தோன்றி மறைவான்.

ஆனால் இந்த தேவ நிலையத்திற்கப்பால் ஒருவன் சென்று விட்டாலோ அவன் மறுபடியும் தோன்றுவதுமில்லை; மறை வதுமில்லை. (சா. 3—6-11.)

## 58. காயத்திரி.

காயத்திரியே இங்குள்ள யாவுமாகும். காயத்திரி என்றால் மொழியாகும். இந்த மொழி என்னும் அமுதத்தினாலேயே இங்குள்ள அனைத்தும் பாதுகாக்கப்படும். காயத்திரி என்றால் பூமிக்கும் பெயர். இப்பூமிக்கப்பால் நாம் செல்ல முடியாதாதலால் பூமியான காயத்திரியே பெரியதென்பார். ஆனால் மனித தேகத்தையும் பூமி எனச்சொல்வதுண்டு. இத் தேகமான பூமியினின்று பிராணன் செல்லுவதற்கு வேறு வழியில்லையாதலால் இக்காயத்திரி சிறந்ததென்பார்கள். மனிதர் இருதயத்தையும் காயத்திரி என்பார்கள். இந்த காயத்திரிக்கு நான்கு கால்களுண்டு. ஆறுவகையாகவும் (வாக்கு, பொருள், பூமி, தேகம், இருதயம், பிராணன், (புல

ருகும். காயத்திரியையும் பிரமமெனச் சொல்வதுண்டு. காயத்திரி பிரமத்தின் மூன்று கால்கள் வானம் நோக்கும். நம்மைச்சுற்றியுள்ள ஆகாசமும் காயத்திரியாகும். நம்மைச் சுற்றியுள்ள ஆகாசம், நம்மகத்திலுள்ள ஆகாசம் போலாகும். நம்மகத்திலுள்ள காயத்திரி, பிரமம், பூர்ணப் பொருள், மாருத பொருளாகும். இதை அறிபவனும் அப்படியே யாகலாம். (சா. 3-12.)

## 59. ஐந்து பிரம புருஷர்கள்

பிரமனின் சுவர்கத்திற்கு ஐந்து காவலர், அதன் வாயிலருகில் உண்டு. அவர்களை அறிந்தால் வன்மையுள்ள மகனை நீங்கள் அடையலாம். அது மாத்திரமன்னியில் அவர்களுலகத்திலும் சந்தோஷமாய்ச் செல்லலாம். பிராணன் எனவும், கண் எனவும், சூரியன் எனவும் சொல்லப்படுபவனே கிழக்குத்திசைக் காவலன். தெற்கு திசையில் வியானன், செவி எனச்சொல்லி சந்திரன் எனப்படுபவன் இருக்கிறுன். மேற்கு திசையில் அபானன், அதாவது மொழி, அக்னி எனப்படுபவன் அமைந்திருக்கிறுன். வடக்குத் திசையில் சமானன், அதாவது மனம் அல்லது மழை எனப்படும் பர்ஜன் யனும், உயரிய திசையில் உத்தானன் அல்லது வாயு, ஆகாச முள்ளான். அவர்களை முறையே தேஜஸு, உணவு, இன்ப மும் யசசும், பிரமவர்சஸும், உணவு, கீர்த்தியும், அழகும், ஒளியும், வன்மையாக எண்ணி நாடவேண்டும். இந்த ஐந்து புருஷர்களைத்தான் நீங்கள் அறிய வேண்டுமென அடிக்கடி சாந்தோக்ய மகரிஷி கூறுகிறுர். (சா13-1-6.)

## 60. சாண்டில்யர்

சாண்டில்ய மகரிஷியினிடம் மாணவன் ஒருவன் சென்று நான் முன்னேறுவதற்கு வழி எது என நமஸ்கரித்தான். குழந்தையே! உன் மனதைப்போல் நீயாவாய். நீ எந்த சங்கற்பமுடன், இந்த சகத்தில் வேலைகளைச் செய்கிருயோ அந்த சங்கற்பத்திற்கேற்றவாறே நீ சகத்தில் வாழ்வாய். உலகம் நீங்கியதும், நீ சங்கற்பமான உன் உறுதியான மனதிற்கேற்றவாறே மறு ஜன்மமெடுப்பாய் என விடையளித்தார்.

வினு :—பிரமமெனப்படும் பரம் பொருள் ஒன்று உண்டு என புவியில் சொல்லுகிருர்களே? அது எங்கு எப்படி இருக்கும்? விடை :—அந்த பிரமம் ஒரு சோதியாகும். அந்த சோதி சுவர்கத்திற்கப்பால், எல்லாம் ஒவ்வொரு பொருளுக்கும் உபரத்திலாகி உன் உள்ளத்திலுமிருப்பான். தானியம், அரிசி, கடுகு அல்லது சிறிய சிறிய பீஜத்தை விடச் சிறியவனுவான். அவன் நமது இருதயத்திலே யுள்ளான். ஆனுல் அவன் பூமி, வானம், சுவர்கம், எல்லா உலகங்களையும் விடப் பெரியவனுகும். அவனிடமிருந்தே எல்லாச் செயல்கள், விருப்பங்கள், கந்தம், மொழி முதலிய அனைத்தும் தோன்றும். அவன் மனோ மயமானவன். பிராணனே அவன் சரீரமாகும். சர்வ சரமான அவன் பேசுவதில்லை. அவனிலே இவ்வுலகமெல்லாம் தோன்றி வாழ்ந்து மறையும்.

வினு :—அந்த பிரமம் நம்மிட மிருப்பதற்கு ஏதாவது நிரூப முண்டோ? விடை :—புகை கிளம்பினுல் நெருப்புண்டு என்பதை நீ அறிவாய். அப்படியே உன் தேகத்தை நீ பரிசித்துப்பார்க்கவும். நீ உணரும் உஷ்ணம் எங்கிருந்து

தோன்றிற்று? உன் செவிகளை இருகைகளால் மூடிக் கொள்ளவும். வண்டியோடுவது போலும், காளையின் குரலைப் போலும், சுடர்விட்டெரியும் நெருப்பின் ஓசை உன் காதில் விழும். அது எங்கிருந்து உன் செவியில் வீழ்கின்றது. இதைவிட அதிகமாய் நான் எப்படி உனக்குச் சொல்வது? சிறுவனும் மௌனமாகக் குருநாதர் கால்களில் வீழ்ந்தான்.
(சா. 3-13-14.)

## 61. மகீதர ஐதரேயர்

மகீதரத ஐதரேயினிடம் சிறிய இளைஞன் ஒருவன் அணுகி, குருநாதரே பிரபஞ்சத்திலேயுள்ள ஐசுவரியங்களை எல்லாம் எங்கு பெறுவேன். நீங்கள், அதை எங்கு, எப்படிக்காணலாமென வினவி நமஸ்கரித்தான். அதற்கு குருநாதனானவர், ஆகாசமே ஐசுவரியப் பெட்டியாகும். அதற்கு வானம் சுற்றியுமுள்ள பாகமானல், பூமியானது அதன் அடிப்பாகமாகும். திசைகள் அதன் பக்கங்களாகும். கீழ்த்திசைக்கு குஹூ எனவும், தெற்கு திசைக்கு சஹமானன் எனவும், மேற்கு வடக்கு திசைகளுக்கு ராகினி, சுபுதன் எனவும் பெயர். இத்திசைகளின் புத்திரர்களே காற்றாகும். இந்த ஆகாசம் என்னும் பொக்கிஷத்திற்கு சுவர்கம் மேல் மூடியாகும். இந்த ஐசுவரியப் பெட்டியிலேயே, நிலம், சுவர்கம், அனல், காற்று, சூரியன், ருக்வேதம், யஜுர் வேதம், சாமவேத முண்டு. இதைத் தவிர ஐசுவரியக் களஞ்சியம் வேறொன்றுமில்லை யென விடை அளித்தார்.

புருஷனின் வாழ்க்கையே ஒரு யக்ஞம் போலாகும் என பெரியார் சொல்லுகிறார்களே, அது எப்படி யக்ஞம் போலாகும்? என மறுபடியும் சிறுவன் வினவினன். அதற்கு

மகரிஷியானவர் மனிதர்களுக்கு உண்மையில் 116 வயதுண்டு மனிதனின் முதல் 24 வருஷம், 24 எழுத்துள்ள காயத்திரியின் காலையக்ஞம் போலாகும். வசுக்கள் என்னும் பிராணங்களே இந்த யக்ஞத்திற்குத் துணைபுரிவான். இரண்டாவது 44 வருஷம் பகல் யக்ஞமாகும். இது திருஷ்டுபு சந்தசிற்கும் 48 எழுத்துக்களுண்டு. உருத்திரர்களே, பிராணர்களாகி நம்மை இந்த யக்ஞம் சரிவரச் செய்வதற்கு உதவியளிக்கிறார்கள். காயத்திரியின் 48 எழுத்துக்களைப்போல், மிகுதியான 48 வருஷங்கள் பிராணர்களான ஆதித்தியர்களால் உதவி செய்யப்படுகிறார்கள். இந்த யக்ஞ உண்மையை நீ நன்றாயுணர்ந்தால், பரிபூர்ண ஆயுளுடன் நீ வாழ்வாய் என மறுமொழியளித்தார்.

கோர அங்கிரஸர், கிருஷ்ணனுக்கு மனிதனே ஒரு யக்ஞ புருஷனாகும் எனச் சொன்னாராம். இதை அறிந்தவன் வேறு எதையும் அறிய விரும்புவதில்லையாம். அதைப்பற்றி நீங்கள் சொல்லுவீர்களா?

இயல்பாய் நமக்குத் தோன்றும் பசி, தாகம், இன்பத்தினின்று பிரிவதே நமது தீட்சையாகும். ஒருவன் புசித்து, பருகி, இன்பமுடனிருப்பதே யக்ஞ காலத்தில் புசிக்கும் சமயமான உபசத மெனப்பெயர். சிரித்து, உண்டு, உல்லாசமாகி யிருப்பதே, யக்ஞத்திலே கானம் செய்யப்படும் ஸ்துத சாஸ்திரமாகும். தவம் முதலியவைகளே யக்ஞத்தின் தட்சணைபோலாகும். சோமரசத்தையே மறுஜன்மமெனச் சொல்வார்கள்.

பரமன் என ஒன்று உண்டு எனச் சொல்லுகிறார்கள் நான் எங்கு எப்படிக் காண்பது?

தேகத்திலே பிரமனைக் காணவேண்டுமானால் அவனை மனம் என எண்ணவும். அந்த மனதான பிரமத்திற்கு

நான்கு பாதங்களுண்டு. மொழி, பிராணன், கண்கள், செவிகளே, அப்பாதங்களாகும். மொழி என்னும் ஒரு பாதத்திற்கு, அனல் சோதி அளித்து உஷ்ணமளிப்பான். பிராணனும் ஒருபாத பிரமத்திற்கு, வாயு சோதி யளித்து உஷ்ணமளிப்பான். கண் என்னும் ஒருபாத பிரமத்திற்கு, திசை சோதியளித்து உஷ்ண மளிப்பான். இவைகளை அறிபவன் ஒளியாகி உஷ்ணமளித்து உயர்வு நிலையை அடைவான். நீ அவனை நன்ருய்க்காண அவனையே சரணுகதி அடையவேண்டும்.

சூரியனில் அந்த பிரமத்தை தியானஞ்செய்தால் நாம் அறியலாமென பெரியார் சொல்லுகிருர்களே? சூரியனுக்கும் அவனுக்குமுள்ள சம்பந்தமென்ன?

ஆதியிலே அசத் என்னும் பிரமமே இருந்தது. அது சத்தாகி தழைத்தது. அது முட்டையாகி ஒரு வருஷத்திற்கப்பால் வெடித்து, தங்கம், வெள்ளி என இருதுண்டங்களாயிற்று. வெள்ளி நிலமாகி தங்கம் வான மாயிற்று. முட்டையின் கடினபாகம் மலையாகவும், கனிந்தபாகம் மேகமுடனை பனியாகவும், சிறிய நாடிகள் நதிகளாகவும், ரசம் கடலாகவு மாயிற்று. அம்முட்டை யினின்று பிறந்ததே சூரியனுன். அவன் உதய மானதும் எங்கும் ஜயகோஷ மாயிற்று. ஏனெனில் அப்பொழுதுதான் நமது விருப்பங்கள் நிறைவேறும் என சனங்கள் என்னுகிருர்கள். இதுதான் சூரியனுக்கும், பிரமனுக்குமுள்ள சம்பந்தம். இவனை இருதய ஆகாசத்தில் காணலாம். இதை இங்ஙன மறிந்து நாடுபவனுக்கு, இன்பமான சத்தம் செவியிலே விழும்.

(சா. 3-15-19.)

## 62. ரைவகன்

சொரியனுன ரைவகன் வண்டியுடனிருப்பதை நீ பார்த் திருக்கலாம். அவனைப்போல் சானஸ்ருதி பௌத்ராயணன் என்னும் இவ்வரசனை என்னுகிருயே? அவனுக்கு நிகராய் இவ்வரசன் எப்படியாவன் என ஒரு ஹம்சம் மற்ருெரு ஹம்சத்தினிடம் சொல்வதை அரசன் செவியுற்ருன். இந்த ரைவகன் யார் எனக்குப் புரியவில்லையே? உலகத்தில் யார் செய்த புண்ணியமும் அவனையே சேர்கிறதாம் என்பதை அறிந்து, அவருக்கு 600 பசு, முத்துமாலை வாகன மளித்து தேவர்களிலும் பிராணங்களிலுமுள்ள இரண்டு எல்லைகளை அறிவிக்கவும் என விரும்பினர். அவர் அவனை இலட்சியஞ் செய்யவில்லை. பௌத்ராயணன் திரும்பி 1000 பசுக்கள், முத்துமாலை, வாகனம், தன் பெண், கிராமத்தையும் அவருக்கு அளித்து வணங்கினர். ஞானம்பெற இவன் எதையும் தியாகஞ் செய்வதால் இவனுக்கு உண்மையாக தாக மிருப்பதென்பதை அறிந்து, அவனுக்கு வாயுவே யாவற்றின் முடிவாகும். சூரியன், சந்திரனும் சாயுங்கால் வாயுவையே சரணுகதியடைவார்கள். சலம் உலர்ந்தாலும் காற்றிலேயே செல்லும். தேகத்திலே வாயுவின் சின்னமான மூச்சே முடிவாகும். மனிதன் தூங்குங்கால், நா, கண், காது, மனம், மூச்சிலேயே சாயும். ஆதலால் புவியை எல்லாம் விழுங்கும் தேவர்களின் முடிவு காற்றும், புலன்களின் முடிவு மூச்சுமென அவனுக்கு அறிவித்து ஆசிர்வாதஞ் செய்தார். (சா. 4-1-2-3.)

## 63. சௌனகாபேயர் கதை

ஆதிகாலத்தில் அறிஞனுயுள்ள மாணவனுக்கே புசிப்ப தற்கேதேனு மளிப்பார்கள். மற்றவர்களுக்கு அவர்கள் அளிப்பதே இல்லை. சௌனக காபேயரின் இக்கதை இவ்வுண் மையை நன்கு புலனுக்கும் :—

சௌனகாபேயரும், அபிப்பிரதாரிணகாட்சசேனிய ரும் ஒருதினம் போஜனம் செய்துகொண்டிருக்குங்கால், மாணவன் ஒருவன் வந்து எனக்குப் புசிப்பதற்கு ஏதேனு மளிக்கவும் எனக்கெஞ்சினுன். அவர்கள் ஒன்றுமே அளிக்க வில்லை. அதற்கு இளைஞன் :—

பெரியாரே! நான்கு மகாத்மாக்களை விழுங்கிய பெரிய தேவர் ஒருவருண்டு. அவரே உலகத்தைப் பாதுகாப்பவ ராகும். காபேயரே மனிதர்கள் அவரைக் காண்பதில்லை. அபிப்பிரதாரிணரே! ஆனுல் அவர் எங்குமுண்டு. அவருக்கே இவ்வுணவு சொந்தமாகும். ஆனுல் அவருக்கு இவ்வுணவு அளிக்கப்படாமல் மறுக்கப்படுகிறது எனக். கூறினுன் சௌனகாபேயர் சிந்தனை செய்து, எல்லாப் பொருள்களின் சிருட்டிகர்த்தா பொன் கொம்புகளோடு அறிவு மயமாய். தேவர்களின் அகத்தான்மாவாகி, அனைத்தையும் உண்பான், அவன் மகிமையே மகிமை. ஏனெனில் புசிக்கப்படாமல். உணவாயில்லாததையும் அவன் உண்பான் என மறுமொழி யளித்து, அவர்கள் அவனுக்கு உணவு அளித்தார்கள்.

சிறுவனுக்கு உணவளித்து விட்டு நாங்கள் உண்மையை அறிவோம் என அவர்கள் மறுபடியும் விளக்கியதாவது :— வாயு, அனல், ஆதித்யன், சந்திரன் சலத்தைப் புசிப்பான். பிராணன் மொழி காட்சி கேட்பது மனத்தைப் புசிப்பான். வாயுவையும், பிராணனையும் புசிப்பவன் ஒருவனுண்டு

அவனே பிரமமாகும். அவன் புசிக்கப்படுவதில்லை. அவனிருக்கும் உனக்கு நாங்கள் உணவு அளிக்க தாமதஞ் செய்ததற்கு மன்னிக்க வேண்டுமெனக்கூறி, இதை அறிபவன் உணவையெல்லாம் பெறுவான் என சிறுவனை வணங்கினார்கள். (சா. 4-3.)

## 64. சத்தியகாமன் கதை

சாபாலை யென்னும் தனது தாயை நோக்கி மகன், அம்மா! நான் பிர்மசாரியாகி குருகுலம் செல்லப்போகிறேன். என் தந்தை பெயரென்ன அம்மா? என்று வணங்கினன்.

உன் தந்தையை நான் அறியேன். நான் பல அதிதிகளை சேவை புரியுங்கால், என் இளமைப் பருவத்தில் உன்னைக் கருத்தரித்தேன். ஆகலால் உன் தந்தை யார் என்பதை நானே அறியேன். என் பெயர் சாபாலை. உன்பெயர் சத்தியகாமன். குருநாதர் உன் கோத்திரத்தை வினவினல் சத்தியகாம ஜாபாலை எனச்சொல்லவும் என ஆசிர்வாதஞ் செய்தாள்.

மகன் ஒரு குருகுலாசிரமஞ் சென்று அதன் தலைவரான கௌதமஹரித்துருமதரை நமஸ்கரித்து நான் மாணவனாக விரும்புகிறேன். ஆசிரமத்தில் என்னை சேர்த்துக்கொள்ளவும் எனக்கூறி, தன் குல வரலாற்றை தாய் மொழிந்ததுபோல் கூறினன்.

தன் கொடுமையான வரலாற்றை உண்மையாய்க் கூறுபவன் பிராமணனே யாகையால் நீ இங்கு மாணவனாகலாம் உன் உண்மை விருதத்திற்கு மெச்சுகிறேன் என ஆசிர்வாதஞ் செய்து, குருகுலத்தில் சேர்த்துக்கொண்டார். (சா. 4-4.)

## 65. பிரமதரிசனம்

கௌதமர் சத்தியகாமனை அழைத்து, இதோ மெலிந்து பலங்குறைந்த 500 பசுக்கள்! கானகத்தில் இவைகளைப் பாதுகாக்கவும் என அவனிடம் அளித்தார். நான் ஆயிரம் பசுக்களாகும் வரை குருகுலம் திரும்பப்போவதில்லை என பல மாதங்கள் மாடுகள் மேய்ப்பதிலேயே காலந்தள்ளினான். ஒரு தினம் பசுக்கூட்டங்களின் தலைவனான விருஷபன் (வாயு) சத்தியகாமனை நோக்கி, நாங்கள் ஆயிரமாய் விட்டோம். ஆசாரியரிடம் எங்களை அழைத்துச் செல்லவும். நீ தொண்டு செய்ததிற்கு இந்த இரகசியத்தை அறிந்து கொள்ளவும் என பிரகாசவானென்னும் பெயருள்ள பிரமத்திற்கு, கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என திசைகள் எனப்படும் நான்கு கலைகளுண்டு. இந்த பிரமத்தை அறிந்து தியானஞ் செய்பவர் பிரகாசமான எல்லாப் பொருள்களையும் பெறுவார்கள். இனி அக்கினி பிரமத்தின் இரண்டாவதை அறிவிக்கும் எனக் கூறிற்று. சத்தியகாமன் பசுக்கூட்டங்களை குருகுல நிலையத்தில் சேர்த்து, மாலை அனலை எழுச்சியாக்கி கீழ்த் திசையை நோக்கி கனலை நாடினான்.

பிரமத்திற்கு புவி, வானம், சோதி, சமுத்திரம் என நான்கு கலைகளுண்டு. இதையே அனந்தன் என அழைப்பது. இதை தியானம் செய்து நாடுபவனும் அனந்தவானாவன். ஹம்சம் மூன்றாவது பாதத்தை அறிவிக்கும் எனக் கூறியது.

பிறகு மறுநாட்காலை ஹம்சனை (சூரியனை)க் கண்டு வணங்கினான். ஹம்சம் பிரமத்தின் மூன்றாவது பாதத்தின் நான்கு கலைகள் அக்னி, சூரியன், சந்திரன், மின்னலாகும் எனக்கூறி அதற்குச் சோதிஷ்மயம் எனப் பெயராகும்

இதை இங்ஙனம் நாடி உபாசிப்பவன், இங்கு சோதி மய மாகி, சோதிமயமான சகத்தை யெல்லாம் ஜயிப்பான். மத்கு என்னும் பறவை பிரமத்தின் வேறு பாதத்தை அறிவிக்கும் என விளக்கினன்.

அப்பால் மத்கு என்னும் பட்சி (பிராணன்) பிரமத்தின் நான்காவது பாதத்திற்கு ஆயதனவான் எனப்பெயராகும், பிராணன், கண், காது, மனம், என நான்கு கலைகள் அவனுக்குண்டு, அதை இங்ஙனம் எண்ணி நாடுபவன், வீடு வாசலுடனுகி எல்லா நிலைகளையும் ஜயிப்பான் என உபதேசம் செய்தது.

மறுநாள் கௌதமர் சோதி மயமான சிடனைக்கண்டு அவன் அநுபவி யாகிவிட்டான் என அறிந்து, அவன் அறிந்த தையே அவனுக்கு பரிபூரணமாய் அறிவித்தார். (சா. 4-4-9.)

## 66. உபகோசலன்

சத்தியகாமஜாபாலரிடம் உபகோசல காமலாயனன் 12 வருடகாலம் அனலைப்பாதுகாத்து, பணிவிடை செய்தும் ஜாபாலர் அவனுக்குக் கற்பிக்கவில்லை. ஜாபாலர் ஏதோ வேலையினிமித்தம் வேறு கிராமம் செல்லுங்கால், அவனுக்கு பிறகு வந்தவர்களுக்கும் நீங்கள் கற்பித்துவிட்டீர்கள்? ஆனல் நீங்கள் அவனுக்கு (காமலாயனருக்கு) ஏன் கற்பிக்க லாகாது எனத் தன்மனைவி சொல்லியதையும் கேட்கவில்லை. இதைச் செவியுற்று மாணவன் உண்ணுமல் விசனத்திலாழ்ந் தான். குருநாதரின் மனைவியும் மாணவன் புசிக்காததைக் கண்டு வருந்தினள்.

இதையெல்லாம் அறிந்த அனல்கள் அவனுக்குக் கற்பித்

ததாவது :—பிராணனே பிரமமாகும். பிரமம் என்பது 'க' எனப்படும் அல்லது 'க்க' எனவும் படும்.

பிராணன் பிரமம் என்பதை நான் அறிவேன்! ஆனல் க அல்லது க்க என்னும் பிரமம் என்றால் என்ன என்பது தான் எங்களுக்குப் புரியவில்லை என மாணவன் விரும்பினன்.

'க' என்பது ஆனந்தம். ஆனல் ஆனந்தம் என்பது அநித்தியம். க்க என்பது ஆகாசம், ஆனல் ஆகாசத்திற்கு அறிவில்லை. இங்ஙனமிருக்குங்கால் இவை பிரமம் எப்படியாகலாம் என நீ வினவலாம்? கா என்பது சாதாரண ஆனந்தமில்லை. க்க எனப்படும் சிதாகாசத்தில் செம்மையாகும் ஆனந்தம் நித்தியமாகும். அதற்கு அறிவுமுண்டு. இத்துடன் பிராணன் என்பதும் இணைந்தால் அதற்கே பிரமமெனப்பெயர். அதைக் குறிப்பதற்கே நாங்கள் சூட்சமமாய் பிரமம் என்றால் பிராணன், க, க்க, என்றுக்கூறினேம் என அனல்கள் விடையளித்தன.

சிறுவன் அனலை நமஸ்கரித்துச் சந்தோஷமாகி, அனல்களின் பிரிவுகளான கார்ஹபத்தியம், அன்வஹாரியம், ஆன்வஹனியத்தை தனித்தனியாய் நமஸ்கரித்து, எனக்கு இன்னம் அறிவிக்கவும் என வணங்கினன். நிலம் அக்னி அன்னம் உணவு ஆதித்தியன் பிரமம்எனக்கூறி சூரியனில் தோன்றுபவனும் நானே எனச்சொல்லி, இப்பாகங்களை நன்றாய் அறிந்து, நினைத்து நாடுபவன், வெகுகாலம் வாழ்ந்து பாதுகாக்கப்படுவான் என கார்ஹபத்தியன் சொன்னன்.

அன்வஹாரிய அனல், சலம், திசை, சந்திரன், நட்சத்திரம், பிரமமாகும், ஆனல் சந்திரனிலுள்ளவனும் நானே எனக்கற்பித்தது. பிறகு ஆன்வஹனிய அனல், பிராணன், ஆகாசம், சோதி, மின்னல் பிரமமாகும். மின்னலிலுள்ளவன் நான் எனச்சொல்லி இவைகளை அறிபவன் முறையே அவன்

ஆரிய, ஆஹவனீய உலகத்தையும் பெற்று, நீண்ட ஆயுளுடனுகி பாதுகாக்கப்படுவான் எனச் சொன்னுர்கள். நாங்கள் ஒருவாறு உங்களுக்கு அறிவித்துவிட்டோம். இனி குருநாதரிடம் வேறு வழியை நீங்கள் அறிந்து கொள்ளவும் என மலர்ந்து எல்லா அனல்களும் மறைந்தார்கள். (சா. 4-10-13).

## 67. குருநாதர் அருள்

காமலாயனர் அனல்களினிடம் சில உண்மைகளை இங்ஙனம் அறிந்து முகமலர்ச்சியுடனுனர். குருநாதர் ஆசிரமம் திரும்பி, முயற்சியுடனுன சீடனின் ஒளியைக்கண்டு நீ இப்பொழுது அருகதையாய் விட்டாய், இனி நான் அறிவிப்பேன் எனக்கூறியதாவது :—

நான் சொல்வதை அறிபவன் தேவவழியை நாடுபவனுவன். அவன் இங்கு மறைந்தால், சோதியுடனுகி, பிறகு நாள், பட்சம், அயனம், வருஷம், சூரியன், சந்திரன், மின்னலுலகத்திலாவான். அத்தகைய புருடனை உலகத்திலுள்ளவர்கள் ஆசிகூறி, எல்லா உலகத்திலும் அவன் சோதியைக்காண்பார்கள். வெண்ணெயும், சலமும்போல் பசையில்லாமல் அவன் செயல்களில் சாய்ந்தவனுவன்.

இத்தகைய நிலையை அடைய, கண்ணில் காணும் புருஷனே பிரமமாகும். அவனே அச்சமற்ற அமுதனுகும் என்பதை அனுபவமாக்கிக்கொள்ளவும். இதுவே இரகசியமெனக்கூறி முடித்தார். (சா. 4-14-15)

## 68. யக்ஞுவழி

வாயுவிற்கு யக்ஞுமெனப் பெயர். ஏனெனில் அவன் செல்லுமிடமெல்லாம் சுத்தஞ்செய்து கொண்டே செல்லு

வான். இந்த யக்ஞத்தைச் சரிவரச்செய்ய இருகால்கள், இரண்டு சக்கரங்களைப் போலுள்ள வாஹனங்கள் அவசிய மாகும். அதையே மொழி மனம் என்பார்கள். மொழியா னது மனிதற்கிசைந்துள்ளதா என்பதை ஒருவன் நன்கு கவனிக்கவேண்டும். இவ்விரண்டிலே ஒன்று பங்கமானல் நொண்டியைப்போலாவான். அல்லது ஒரு சக்கரமுள்ள வண்டியைப்போல் பயனன்னியிலாவது நிச்சயம். பெரிய யக்ஞங்கள் செய்யுங்காலத்தில், சில மந்திரங்களைச் சிலர் மந்தி ரங்களைச் சொல்லிக் கொண்டுபோனல், சிலர் அதை மனத் தினல் கவனித்து வரவேண்டும். ஆதலால் மனம், மொழி, இரண்டையுங் கலந்து வாயுவான யக்ஞத்தால் எதையும் சுத்தி செய்யவும் என சாந்தோக்கிய ரிஷி கூறுவது வழக்கம். (சா. 4-16.)

## 69. சகங்கள் கதை

பொருள்களுக் கேற்றவாறு சட்டதிட்ட நிலைகளை அறிந்து, லவணத்தால் பொன்னையும், பொன்னல் வெள்ளியை யும், வெள்ளியைத் தகரத்தாலும், இரும்பை ஈயத் தாலும், மரத்தை இரும்பு தோலாலும் இணைப்பது போல், உலகத்தை யெல்லாம் இணைப்பது நன்மையாகும். பூலோகம், புவலோகம், சுவர்கலோகம், ருக்கு, யஜுர், சாம வேதத்தினின்று வந்தன. இம் மூன்று வேதங்களும் முறையே அக்கினி, வாயு, ஆதித்யனின் சாரமாகும். இம் மூன்றும் முறையே நிலம், வானம், சோதியின் இரசமாகும். இவைகள் இங்ஙனம் பரஸ்பரம் சம்பந்த முடனிருப்பதால், இச்சம்பந்தங்களுக் கேற்றவாறு அப்பொருள்களை ஒன்று சேர்த்து நாம் புனிதமார்க்கத்தை அடையவேண்டு மென்பது ரிஷிகள் எண்ணமாகும். (சா. 4-17.)

# 70. ஐந்து தேவர்

சித்தம், சுவாசம், சொல், செவி, கண் என ஐந்து தேவர்களுண்டு. இந்த ஐவர்களும் பரஸ்பரம் சண்டை புரிந்துகொண்டு பிரஜாபதியினிடஞ் சென்று எங்களில் யார் பெரியவன் என வணங்கினார்கள். அதற்கு பிரஜாபதி யானவர், எவன் தேகம் நீங்கியதும் காய மழிகின்றதோ அவனே பெரியவன் என உரைத்தார்.

இதைச் செவியுற்றதும், நாக்கு தேகம் நீங்கி தனிமை யாயிற்று. ஆனால் நாக்கு சென்றதும் தேகம் அழியவில்லை. மொழி யொன்றைத் தவிர தேகம் எல்லாவழிகளிலும் திடமா யிருப்பதைக் கண்டு, வெட்கமுடன் நாக்கு திரும்பினான். அங்ஙனமே கண், காது, மனம் தேகத்திற்கு காட்சி, கேட்டல் புத்திக்கு பங்கம் விளைவிப்பதைத் தவிர, விபத்து ஒன்றும் தாங்கள் நீங்குவதால் வருவதில்லை என்பதை அறிந்து தங்கள் நிலைகளில் மறுபடியும் நுழைந்தார்கள்.

ஆனால் சுவாசமானது சரீரத்தினின்று நீங்க முயற்சி செய்யுங்கால் திமிறிக்குதிக்கும் குதிரையால் அசைக்கப்பட்ட முளைக்கம்பம்போல் புலன்கள் கலங்கி, சுவாசத்தை நமஸ் கரித்து, நாங்கள் நிலையுடனவது உன் நிலையால் என்றும், செவிசம்பத்து உன் ஐசுவரியமே என்றும், உன் வன்மையே பிரகஸ்பதி யென்றும், ஸ்தாபனமாவது உன் திடமே என்றும் மனம், செவி, நா, கண், முறையே மொழிந்து தங்கள் எளிமையை அறிந்தன. (சா. 5-1)

## 71. இரகசிய கதை

கோசுருதிவையக்ரஹபாதர் என்னும் அறிஞர் சத்திய காமஜாபலே என்னும் மகரிஷியை அணுகி சுவாசத்திற்கு உணவு எது என்றார்.

புவியிலுள்ள நாய், பட்சி முதலியவைகளுக்கு எது உணவோ அதுவே சுவாசத்திற்கும் என விடை அளித்தார்.

பெரியாரே சுவாசத்தின் உடை எது? சலமாகும்.

நீங்கள் மர்மமாய்ச் சொல்வது எனக்கொன்றும் புரியவில்லையே? எதையும் நீ உணவாகப் புசிக்கலாம். ஆனால் உணவு புசிப்பதற்கு முன்னரும், பின்னரும் நீ சலம் பருக வேண்டும். இதைத்தான் சுவாசத்தின் உடை எனப்பெரியார்கள் கூறுவது.

சீடனே! உலர்ந்த கட்டையினிடம் இந்த இரகசியத்தை மொழிந்தால், அது பசுமையாகித் துளுக்கும். (சா. 5-2)

## 72. சுவர்கயாத்திரை கதை

கௌதமருக்கு சுவேதகேது ஆருணேயர் என ஒரு மகனுண்டு. அவன் ஒரு தினம் பாஞ்சால தேசத்து அரசனிடஞ்சென்றான். நான் என் தகப்பனிடம் கல்வியைக் கற்றிருக்கிறேன் எனக்கூறியதும், அவர் ஐந்து வினாக்களை வினவினார். மகன் விடையளிக்கமுடியாமல் வீடு திரும்பி, அப்பா! இன்று நான் வெட்கமடைந்தேன். ஒரு க்ஷத்திரியர் வினவிய ஐந்து கேள்விகளுக்கு என்னால் பதிலளிக்க முடியவில்லை எனக்கூறி வணங்கினான். தந்தையும் இவ்வினாக்களுக்கு விடையை யறியாமல், இருவரும் அந்த க்ஷத்திரியரை அணுகினார்கள். அரசர் அவர்களை நோக்கி, இதுவரை பிராம

னர்களே இவ்வறிவை யறியவில்லை. நான் வினு, விடைகளு டன் கூறுகிறேன் எனச் சொன்னதாவது :—

ஐந்தாவது ஆஹூதியான சலம் எப்படிப் புருஷனுவன்?

சகம் அக்கினியாகும். சூரியன் அந்த அக்னியின் ஆகுதியாகும். அவன் கிரணங்களே புகையாகும். தினம் வெளிச்சமாகி சந்திரன் அதன் செந்தணலாகும்.நட்சத்திரமே பொறிகளாகும். இந்த அனலில் தேவர்கள் சிரத்தையுடன் ஆகுதி (சலத்தால்) செய்வதால், அவ்வனலிலிருந்து சோம ராஜன் தோன்றுகிறுன். பர்ஜன்யன் அக்கினியானுல் அவ னுக்கு காற்று, மேகம், மின்னல், இடிமுழக்கம், இடிகற்கள், ஓமசாமக்கிரியைகளாகும். அங்கு சோமனை ஆகுதி செய்வ தால் மழை தோன்றுவான். புவி ஒரு அக்கினியாகும். அதற்கு வருடம், வானம், இரவு, திசை, நடுத்திசைகள், ஓம சாமக்கிரியைகளாகும். அங்கு தேவர்கள் மழையை ஆகுதி செய்து உணவைப் புலனுக்குகிறுர்கள். புருஷன் அக்கினியா கும்; மொழி, சுவாசம், நாக்கு, கண், காது, சாமக்கிரியை களாகும். இவ்வனலில் உணவை ஆகுதி செய்வதால் ரேதஸம் தோன்றும். இந்த ரேதஸை தேவியான அனலுக்கு தேவர் கள் ஆகுதி செய்து கர்ப்பத்தைப் புலனுக்குவார்கள். இதனு லேயே முதல் ஆகுதியில் சொன்ன சலத்தின் ஐந்தாவது ஆகுதியை புருஷர் எனச்சொல்வது.

வினு :—இங்கு நீங்கியதும் மனிதர்கள் செல்லுவது எங்கே? விடை —இங்கு மனிதர்கள் கர்ப்பத்தில் வசித்து, பிறகு பிறந்து வாழ்நாட்களைக் கழித்து வந்த அனலிலேயே மறுபடியும் நுழைகிறுர்கள்.

வினு :—தேவர்களின் வழி எது? அதற்கு மாறுன வழியையுஞ் சொல்லவும்? விடை—சீவர்கள் சோதியில் கலந்து, சோதியினின்று தினம், தினத்தினின்று இரண்டு

பட்சங்களுலிஞ் சேர்ந்து, பட்சங்கடந்து அயனத்தில் இணைந்து, பிறகு சம்வத்சரத்திலாகி, அப்பால் சூரியன், சந்திரன், மின்னலில் நுழைவார்கள். அங்கு மானவனல்லாத ஒரு புருஷனுண்டு. அவன் பிரமத்திற்கு அழைத்துச் செல்லுவான். இதுவே தேவவழியாகும். மாறுன வழியாவது :...சிலர் அனலிலுள்ள புகையுடன் இணைந்து, புகையிலிருந்து, இரவு, அப்பால் பட்சம், அயனத்திலே அணைந்து வருஷத்திலே செல்ல சக்தியற்றவர்களாகிறுர்கள். இதுவே மாறுன வழியாகும்.

வினு :—இவர்கள் திரும்வருபி வதெங்ஙனம்? விடை:—இவர்கள் பட்சத்தினின்று பிதூர்லோகம், வானலோகம், சந்திரனுன சோம அரசரிடம் நுழைகிறுர்கள். இங்கு போஜனப் பிரியர்களான தேவர்களால் புசிக்கப்பட்டு சில காலம் வாழ்வார்கள். பிறகு வந்த வழியாகவே திரும்பி, வானம், காற்ருகி, புகை, பனி, மேகமாகி மழைபாய் வீழ்வார்கள். அதற்கப்பால் வனஸ்பதிகளாகி நெல் முதலிய தானியங்களாவார்கள். பிறகு சிவராசிகளால் புசிக்கப்பட்டு அவர்களைப் போல் சன்ம மடைவார்கள்.

வினு :—உலகம் என் எப்பொழுதும் நிறைவதில்லை? விடை :—மனிதர்கள் பிரமத்திற்கு அடிக்கடி செல்லுவதாலும் அல்லது உலகத்திலே அடிக்கடி திரும்பி வருவதாலும் உலகம் ஒருபொழுதும் நிறைவதில்லை. இப்படி பலமாறுதல்களான வழிகள் அவரவர் கர்மங்களுக்கேற்றவாறு எனக்கூறி பிராமணர்களுக்கு ஆதியிலே ஒரு சிற்றரசரே முதன் முதலாய் இவ்வுண்மையை அறிவிப்பதால் இதை அறிபவர்கள் மேன்மையான வழியையே நாடுவார்கள் எனச்சொல்லி முடித்தார். (சா. 5-3-10).

## 73. வைசுவாநரன்

ஆதியில் பிராசின சால ஔபமன்யவன், சத்திய யக்ஞ பௌலுஷி, இந்திரத்யும்னபால்லவேயன், சனஸ்சாரகராட்சயன், புடில ஆச்வதராச்வினன் என ஐந்து ரிஷிகளுண்டு. இவர்கள் உத்தாலக அருணியிடஞ் சென்று வைசுவாநரன் என்னும் ஆத்மா என்றால் என்ன என வினவினார்கள்.

அவர் நானும் இதை அறியேன். நாம் அசுவபதிகைகேயரிடஞ் செல்லுவோம் என யாவரும் அவரை நாடினார்கள். அவ்வரசனை அணுகி வணங்கி வைசுவாநர ஆத்மாவைப் பற்றிச் சொல்லவும் என வணங்கினார்கள். க்ஷத்திரிய ஞானி அவர்கள் மொழிகளைச் செவியுற்று பிறகு ஒவ்வொருவராக நோக்கி விளக்கியதாவது :—

ஔபமான்யவரே, சோதியுலகே வைசுவாநரன் என நீ எண்ணுகிறாய். அவன் பெயர் சுதேஜசனாகையால், உன்னிடமும், உன் குலத்திலும் தேஜஸ் அதிகரித்து, அன்னபானாதிகள் அதிகமாகும். ஆனால் நீ கருதும் ஆத்மா பிரமத்தின் தலைபோலாகும். இது பரிபூர்ணமில்லையால் உனக்கு பங்கமே புலனாகும்.

சத்திய யக்ஞ பௌலுஷியே! நீ சூரியனையே வைசுவாநரன் என எண்ணுகிறாய். அவன் பெயர் விசுவரூபமாகையால் எல்லா ஐசுவரியங்களையும் நீ பெறலாம். ஆனால் இது ஆன்மாவின் கண் மாத்திரமாவதால் இதைப் பரிபூர்ண பிரமமென எண்ணினால் நீ குருடன் போலாவாய். நீ நினைப்பதும் உண்மையில்லை.

இந்திரத்யும்ன பால்லவேயரே வாயுவையே நீ பிரமமென எண்ணுகிறாய். பலவழி எனப்படும் வாயுவை நாடுவ

தால் வன்மையை யெல்லாம் நீ பெற்ற போதிலும் சுவாசமான இதை பிரமத்தின் பரிபூரண ஆத்மாவென எண்ணுதே.

சன சாரக ராட்சியரே! நிறைவு எனப்படும் ஆகாசம், பிரமத்தின் முதுகு போலாவதால் அதையே பிரமமென முடிக்கவேண்டாம். அங்ஙனம் எண்ணினால் நீ முதுகு ஒடிந்தவனுவாய். ஆகாச பூஜையால் எல்லா விருப்பங்களைப் பெற்ற போதிலும் அதனுல் உனக்கு பங்கமே தோன்றும்.

புடிலமாசுவராஸ்வியே! ஐசுவரிய மெனப்படும் சலத்தை நீ நாடுவதால் அதனுல் அன்ன ஆகாராதிகள் உனக்குக் கிடைத்தபோதிலும் அதுவும் பரிபூர்ண மில்லையால் அதனுல் உனக்கு பங்கமே தோன்றும். ஔத்தாலக ஆருணியே! நிலை எனப்படும் புவியை நீ பிரமமென உபாசனை செய்கிருய், அதனுல் சற்று நிலையை யடைந்த போதிலும் அது பிரமத்தின் பாதமொன்றே யாவதால் அதுவும் பின்னமான எண்ணமே யாகும்.

இவைகள் எல்லாம் வைசுவாநர ஆத்மாவாகாது. அவனை அணுவாக எண்ணி நம்மிலும் எங்கும் அனைத்திலும் காண்பது அவசியமாகும். சோதி அவன் தலை. ரூபம் கண்கள். வாயு பலவழிகள். நிறைவு முதுகு. செல்வம் வயிறு, புவிபாதம், வானம் மார்பு, புற்கள் ரோமங்கள், இருதயம் மனம், வாய்கார்ஹபத்தியம் அன்வஹாரியம் ஆஹவனீயமாகும்.

இதுதான் சீடர்களே! உண்மையான வைசுவாநரனுகும். (சா. 5. 11-18.)

## 74. அக்கினி ஹோத்திரம்

புவியிலே அக்கினிஹோத்திரம் செய்யாதவர்களே இல்லை. ஆனால் இதை அறிபவர்களோ குறைவு. இதை அறிந்து செய்தால் காய்ந்த புற்களைக் கனல் எரிப்பது போல் பாவங்கள் எல்லாம் அறிவால் அழிந்து விடும்.

தேகத்திலே ஆறுவிதமான சுவாசங்களுண்டு. அவைக ளுக்கு பிராணன் வியானன் அபானன் சமானன் உதானன் எனப் பெயராகும். அவைகளுக்கு உணவு முதலியவைகளை எல்லாம் அளித்து நன்றாய் திருப்தி செய்யவேண்டும். இப் படியொருவன் திருப்தி செய்வதால் தானும் தன் குலமும் திவ்யமான ஐசுவரியங்களைப் பெற்று பெரும் பதவியைப் பெறுவான். உண்மையான வைசுவாநரனையு மறுகுவான். இதுவே அக்கினி ஹோத்திரமாகும். (சா. 5. 19. 24)

## 75. காணுதவன் கதை

புராதனத்திலே உத்தாலக ஆருணி என யொருவரிருந் தார். அவருக்குச் சுவேதகேது என ஒரு மகனுண்டு. அவன் தன் 12 வது வயதில் குருகுலாசிரமம் சென்று வேதங்களை யெல்லாமறிந்து 24 வது வயதில் வீடு திரும்பினுன். தந்தை மகனிடம் அறிந்தவன் என்னும் கர்வமிருப்பதை அறிந்து இவ்வினுக்களுக்கு விடையளிக்கவும் எனக் கூறினுர்.

(1) நாம் எதனுல் செவியுற்று எதைச் செவியுற முடியாது? எதனுல் கல்வி, காட்சி முதலியவைகளைக் காண் போம்? கல்வி காட்சியால் எதை அறியமுடியாது?

நான் இதற்கு விடையளிக்கச் சக்தியற்றவனுகும். நீங் களே எனக்கு அறிவிக்க வேண்டுமென மகன் வணங்கினுன்.

ஒரு பிடி மண்ணிலிருந்து வேற்றுமையாகத் தோன்றும் மண் பாண்டங்களை எல்லாம், ஒரு கட்டித் தங்கம், இரும்புத் துண்டு முதலியவைகளினின்று தங்கம் இரும்பு மயமானவைகளை யெல்லாம் முறையே மண், பொன், இரும்பு என மெய்யாக நாம் அறிவது போல் அந்த ஏகப்பொருளை அறிய வேண்டுமென்றார். இவனே நமக்குக் கண் காது மனது அளித்து காணமல் கேட்காமல் அறியப் படாமலுள்ளவன். (சா. 6-1.)

## 76. உத்தாலகன்

உத்தாலக ஆருணேயன் தன்மகனான சுவேதகேதுவிற்கு சிருட்டியைப் பற்றிச் சொல்லிய கதையே இது.

ஆதியிலே ஒரே ஒரு பரம் பொருளிருந்தது. அது சிந்தனையிலாகி அனலை எழுச்சியாக்கிற்று. நாம் வெயிலில் அதிகமாய் நடந்தால் வியர்த்து நீரைக்கக்குவது போல் அப் பரம்பொருள் அனலுக்குப் பிறகு சலத்தையும் சலத்தினின்று நிலத்தையும் (உணவு) செம்மையாக்கிற்று.

பிறகு அனல் சலம் நிலம் ஒன்று சேர்ந்து பிரமத்துடன் அனலில் நுழைந்தார்கள். அங்ஙனமே சலம் நிலத்தில் சேர்ந்து அண்டஜம் பிண்டஜம் உத்பீஜம் என்னும் மூன்று சிருட்டி நிலயங்கள் புலனாயிற்று. இங்ஙனம் முவ்வகையாய்ச் சேர்ந்ததே பலவடிவம் பெயர்களுக்குக் காரணமாகும். முவ்வகை மர்மத்தை கவனித்தால் இவ்வுண்மை புலனாகும். நன்றாய்ச் செவியுறவும் என மகனை நோக்கி,

சுடர் விட்டெரியும் அனலிலே சிகப்பு நிறமே அனல் சுபாவம், வெள்ளை நிறம் சலத்தின் சுபாவம், கருமை நிறம் நிலத்தின் குணமாகும். நாம் அனல் எனச்சொல்வது

மொழியின் வேற்றுமையினாலேயாகும், உண்மையில் மூன்று நிறங்களே சத்தியமாகும். சூரியன், சந்திரன், மின்னல் முதலியவைகளிலுள்ள சிகப்பு, வெண்மை கருமை, அனல், சலம், நிலத்தின் சுபாவம் என அறிஞர்கள் அறிவார்கள்.

இனி மனிதர்களிலும் இம்மூன்று பொருள்களைக் காணலாம். புவியை (உணவை)த் தின்பதால் தூலபாகம் தாது வாகவும், நடுப்பாகம் இறைச்சியாகவும் சூட்சமபாகம் மனதாகவும் மாறும். சலத்தைப் பருகுவதால் தூலபாகம் நீராகவும், நடுப்பாகம் இரத்தமாகவும் சூட்சம பாகம் சுவாச மாகவும் மாறும். அனலை (நெய், வெண்ணெய்)த் தின்பதால் தூலபாகம் எலும்பாகவும், நடுப்பாகம் மூலை எலும்பாகவும், சூட்சம பாகம் மொழியாகவும் மாறும் எனக் கூறினர்.

மகன் உடனே தந்தையை நோக்கி அப்பா! உணவு சலம் அனல் எங்ஙனம் மனம், சுவாசம், மொழியாக மாறு மென்பது எனக்குப் புரியவில்லை எனக் கெஞ்சினன். மகனே! தயிரைக் கடைந்தால் வெண்ணெய் எப்படி எழுச்சி யாகின்றதோ அப்படியே தேகத்தில் உணவு சலம் அனல் கடையப்பட்டு அவைகளின் சூட்சம பாகங்கள் மனது சுவாசம், மொழியாக மாறும் எனக் கூறி ஆசிர்வாதஞ் செய்தார்.

இன்னம் எனக்கு விளங்கவில்லையே என்றான். பிறகு சொல்லுகிறேன் என மகனை யனுப்பிவிட்டார். (சா.6-1-6.)

## 77. மனிதர் கதை

சுவேதகேது மறுதினம் தந்தையையணுகி, அப்பா! எங் ஙனம் மனம், சுவாசம், மொழி, உணவு, சலம், அனலிலிருந்து புலனாவதென்பதை எனக்கு நன்கு விளக்கவும் என நமஸ் கரித்தான்.

மகனே ! மனிதர்கள் பலகலைகளாய்ப் பிரிந்துள்ளார்கள். சுவாசம் நீங்காமலிருக்க சலம் பருகிக்கொண்டு, உண்ணுமல் 15 தினங்கள் நீ சும்மாயிருக்கவும் என அவனை ஆக்ஞாபித்தார். மகன் 15 தினம் உண்ணுமல் கழித்து தந்தையை அணுகினுன்.

அவர் மகனை நோக்கி, நீ பாராமல் அறியும் வேத ருக்குக்களைச் சொல்லவும் என்றதும் என் ஞாபகத்தில் வரவில்லையே என வணங்கினுன். மகனே, அணைந்துபோன தீக்குவியலிலிருக்கும் ஒரு சிறு நெருப்புத்துண்டே உன்னிடமிருக்கின்றது. மற்றவைகளெல்லாம அணைந்தள்ளபடியால் உயிரைத் தவிர வேறு யாவற்றையுமிழந்துவிட்டாய். இனி நீ புசித்துவரவும் என அனுப்பிவிட்டார். மகன் புசித்ததும் ஞாபகசக்தி தோன்றுவதை அறிந்தான். இங்ஙனமே சலம், அனலினின்று சுவாசம், மொழி எங்ஙனம் மாறுமென்பதை அனுபவத்திலாக்கி தந்தையினிடஞ்சென்று, ஒரு நெருப்புத்துண்டு எழுச்சியால் தீக்குவியல் தோன்றுவதுபோல், என்னிடம் மிகுதியாயிருந்த ஒரு (கலையை உணவினுல்) பெருக்கி, உண்மையை அறிந்தேன். சுவாசம், சொற்களின் மூலத்தையும் நான் அறிந்துவிட்டேன் என நமஸ்கரித்துச் சென்றுவிட்டான். (சா. 6-7.)

## 78. தூக்கம், தாகம், பசி

மரத்தூண் ஒன்றிலே ஒரு பட்சியை சிலர் கட்டிவைத்திருப்பதை நீங்கள் பார்த்திருக்கலாம். சில சமயங்களில் அப்பறவை இங்குமங்கும் பறந்து எங்கும் செல்லமுடியாமல் கடைசியாய்க் களைப்பாறுவதற்கு கட்டின இடத்திலேயே சாய்வதுபோல், மனிதர்கள் மனம் இங்குமங்குமலைந்து, மன

தைச் சுவாசத்திலே இணைந்து தூங்குங்கால் சத்தியத்திலே தோய்கிறார்கள். தூங்கும் நிலை உண்மையாய் அவர்கள் சொந்த நிலையாவதால் சுவ்பிதி என உரையளிக்கும் வட மொழி பதத்தாலுரைப்பார்கள். இதுவே தூக்கத்தின் கதை யாகும் என உத்தாலகர் உரைத்ததாகும்.

பசி தாகத்தின் மூலமும் சத்தியமேயாகும். அதன் வர லாற்றையும் கூறுகிறேன் என சுவேதகேதுவிற்குத் தந்தை சொல்லியதாவது :—

ஆடுமாடுகளை இழுத்துச் செல்லுபவனை சாரதியாய் எண்ணுகிறோம். அப்படியே உணவை சலம் இழுத்துச் சென்று, ஜீரணஞ்செய்து பசியைப் புலனாக்குவான். ஜீரண மான உணவால் (நிலம்) தேகமுண்டாகும். அதாவது தேகத் திற்கு ஆதாவு, உணவு, உணவின்மூலம் சலமாகும். சலத்தின் மூலம் அனலாகும். அனலின் மூலம் சத்தியம். இங்ஙனமே யாவும் சத்தியத்திலே சாயும்.

தாகமென்றால் என்ன? மனிதன் பருகியசலத்தைஅனல் இழுத்துச் சென்றுவிட்டால் தாகம் தோன்றும். அதனாலேயே வடமொழியில், அனலை சலத்தை இழுப்பவன் எனச்சொல் லும். இச்சலத்தால் தேகம்; தேகத்தின் மூலம் சலமாகும்; சலத்தின் மூலம் அனல், அனலின் மூலம் சத்தியமாகும்.

ஆதலால் தூக்கம், தாகம், பசியின் மூலம் பரமன் என அறிந்துகொள்ளவும் எனக்கூறி, அப்பரமனை உன்னிலும் காணலாமென விளக்கிக்கூறினர். (சா. 6-8.)

## 79. சத்தியம் எங்கே?

சுவேதகேது தன் தந்தையான உத்தாலகரை அணுகி, அப்பா! நீங்கள் முன் சொல்லியதையெல்லாம் கவனித்தால், நாம் எல்லாம் உறங்குங்கால் சத்தியத்தில் சாய்ந்துள்ளதாக அறிகிறோம். ஆனால் அதை நான் உணரவில்லையே? இங்கு பிராணிகளின் பல வேற்றுமையான பிரிவுகளை நான் அறியவில்லை. இவைகளின் மூலஸ்தானத்தையும் எனக்கு அறிவிக்கவும் என நமஸ்கரித்தான். உடனே தந்தை, இனிமையான தேனை நீ அறிவாய். தேன் என்பது பல மலர்களின் ஒன்று திரண்ட இரசமாகும். நான் இந்த மலரினின்று வந்தேன் எனத்தேனில் எந்த அணுவானரசமும் அறிவதில்லை. அங்ஙனமே நீ உறங்குங்கால் சத்தியத்தில் சாய்ந்துள்ளதாக உணர்வதில்லை. நதிகள் எல்லாம் சாகரத்தில் வீழ்ந்ததும் இதே நிலையையடையும்.

ஆனால் சத்தியத்தினின்று (உறக்கத்தினின்று) எழுச்சியானவுடன் நான் சிங்கம், நான் கரடி, எனப் பற்பல சீவராசிகளாகமாறும். அந்த சூட்சமமான இரசத்திலேயே ஆன்மாக்களுமாகும். அதுவே சத்தியம். அதுவே ஆன்மா. நீயே அதுவாகும் என அறிவித்தார். (சா. 6-9-10.)

## 80. நீயே அதுவாகும்

எனக்கு இன்னம் சரியாகப் புலனாகவில்லையே எனச் சுவேதகேது தந்தையை அணுகி நமஸ்கரித்தான். தந்தை அவனை நோக்கி:—

ஒரு பெரிய மரமொன்றில் சீவான்மா நிறைந்திருக்கும் வரை, இங்குமங்கும் மரத்தை வெட்டியபோதிலும் அது

காய்ந்து பட்டுப்போவதில்லை. ஆனால் ஆன்மா சென்றுவிட்டால் அம்மரம் உலர்ந்து பாழாகும். ஆனால் ஆன்மா அழிவதில்லை. அந்த சூட்சமமான இரசத்திலேயே இருக்கும் எல்லாப் பொருள்களின் சீவன்களுண்டு. அதுவே சத்தியம். அதுவே ஆன்மா. சுவேதகேதுவே! நீயே அதுவாகும் எனக் கூறி, அத்திப்பழமொன்றைக் கொண்டுவரவும் என்றார்.

• இதோ அத்திப்பழம்!

அதை அறுக்கவும்?

அதைத்துண்டு துண்டாக்கிவிட்டேன்.

நீ, அங்கு எதைப்பார்க்கிறாய்?

கண்களுக்குப் புலனாகாத விதைகள்.

ஒரு விதையைத் துண்டிக்கவும்?

அதையும் துண்டம் துண்டமாக்கிவிட்டேன்.

நீ, இப்பொழுது காண்பதென்ன?

ஒன்றும் புலனாகவில்லையே என்றான்.

சரி நீ இதை ஞாபகத்தில் வைக்கவும்.

கொஞ்சம் உப்புவேண்டும்?

பிறகு மகன் கொண்டுவந்த உப்பை சலபாண்டத்தில் சேர்த்து அப்பால் வரவும் என அனுப்பிவிட்டார். பிறகு அவன் திரும்பிவந்தவுடன்:—

மகனே! சலத்தில் சாய்ந்த உப்பு எங்கே?

மகன், சலபாண்டத்தை நோக்கி, அப்பா! உப்பு கரைந்துவிட்டது என்றான்.

சலத்தின் மேல் பாகத்தை உருசிக்கவும்.

உப்பு அப்பா!

நடுப்பாகத்தை உருசிக்கவும்?

உப்பு அப்பா!

அடிப்பாகத்தை உருசிக்கவும் ?

அதுவும் உப்புத்தான் அப்பா. சரி நான் சொல்வதை கவனமாய்க் கேட்கவும் !

அத்திப்பழவிதையிலே நீ பார்க்காத அந்த இரசம், அந்த இரசவன்மையினுலேயே அந்த அத்திமரம் வளர்கின்றது. இங்கு நீ உப்பைப்பார்க்காத போதிலும், உப்பு இருப்பது என்பதை அறிந்தாய்.

அப்படியே நீ சத்தியத்தைக் காணுதபோதிலும், அச்சத்தியத்தில் எல்லாம் சாய்ந்துள்ளதாக அறியவும். அதுவே ஆன்மா. சுவேதகேதுவே, நீயும் அதுவே யாகும்.

(சா. 6-11-13.)

## 81. குருநாதர்

சுவேதகேதுவே ! குருவன்னியில் எதையும் நீ அறிய முடியாது.

உன் கண்களை துணியால் மறைத்து நடுக்கானகத்தில், மனித சஞ்சாரமில்லாத வெளியிலே உன்னைத் தனிமையாய் விட்டுவிட்டால் எங்கு செல்லுவது என வழி தெரியாமல், நீ திண்டாடுவாய்.

அங்கு ஒரு புருஷர் தோன்றி, உன் கண் கட்டுக்களை அவிழ்த்து உனது நாட்டிற்கு வழியைக் காண்பித்து விட்டால், நீ சுகமாய் வழி நடந்து ஆனந்தமாய் வீடு சேர்வாய்.

அப்படியே மாணவர்கள் குருநாதர்களின் உதவியைப் பெற்று பெரிய உண்மையைப் புனிதமா யறிவார்கள்.

(சா. 6-14.)

## 82. தத்துவமசி கதை

மறுபடியும் சுவேதகேது தந்தையையணுகி சத்தியத்தில் சாய்ந்தவனின் நிலையை எனக்கறிவிக்கவும் என அவரை நமஸ்கரித்தான்.

ஒருவன் விபத்தான நோயுடனுனல், அவனுடைய உறவினர்கள் எல்லாம் அவனருகில் சென்று, நான் யார்? நான் யார்? என ஒவ்வொருவரும் அவன் உயிரைப் பரிட்சை செய்வார்கள். அவனுடைய மொழி மனத்திலும், மனம் சுவாசத்திலும், சுவாசம் அனலிலும், அனல் பெரிய தேவதையிலும் சேராமலிருந்தால் வினவியதற்கெல்லாம் பதிலையளிப்பான். ஒரு வேளை இணைந்துவிட்டாலோ அவன் ஒன்றையும் அறிவதில்லை. அந்த சூட்சம இரசத்திலேயே எல்லா ஆன்மாக்களுமாகும். அதுவே சத்தியம். அதுவே ஆன்மா. சுவேதகேதுவே! நீயே அதுவாகும். (சா. 6-15.)

## 83. சத்திய உணர்வு

சத்தியத்தை உணர்பவன், அல்லது சத்திய கவசம் அணிபவனை நான் எங்ஙனமறிவது என சுவேதகேது தந்தையை மறுபடியும் அணுகி நமஸ்கரித்து வினவினுன்.

சாதாரணமாய் நமதுநாட்டில் திருடர்களைத் தண்டிக்கும் வழியை நீ அறிந்திருக்கலாம். இவன் திருடனு என்பதைப் பரிசோதிக்க காய்ச்சின இரும்பால் அவனைப் பரிசிப்பார்கள். அவன் உண்மையாய்த் திருடியிருப்பானேயானுல், அசத்தியத்தை மறைக்க நான் திருடவில்லை எனப்பொய் சொல்லுகிறுன். சத்தியமான ஆன்மாவை அசத்திய கவசத்தால் மூடி

யிருப்பதை, இல்லாதவன் போல் காட்சியாக்குவதால் சூடான இரும்புத்துண்டு அவனை எரித்துவிடுகின்றது.

அவன் திருடனில்லையானால், அவன் இருப்பதை இருப்பது போல் உண்மை சொல்வதால், சத்திய ஆன்மாவை சத்திய கவசத்தாலேயே சூழப்பட்டுள்ள அவனுக்குச் சூடான இரும்பு, சுட்டையுமளிப்பதில்லை.

அப்படியே சத்தியத்தில் சாய்ந்தவன், எத்தீமையாலும் பற்றுமலிருப்பான். அதுவே சத்தியம். சுவேதகேதுவே! நீயே அதுவாகும். (சா. 6-16.)

## 84. நாரதர் ஞானோதயம்

சனத்குமாரர் என சிறந்த ரிஷியொருவரிருந்தார். அவர் பெரிய தத்துவஞானியாகும். புவியிலுள்ள பல பெரியார்கள் அவரை அணுகி உபதேசம் அடிக்கடி பெறுவார்கள். ஒரு சமயம் நாரதர் அவரை நமஸ்கரித்து எனக்குப் பிரமத்தைப் பற்றி அறிவிக்கவும் என வினவினர்,

நீ இதுவரைப் படித்ததென்ன? நான் அதை அறிந்த பிறகு உனக்குக் கற்பிப்பேன் எனவிடையளித்தார்.

நா. :—நான் ருக்வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வவேதம்; இதிஹாசபுராணம். வேதாங்கம், பிதுருநூல், கணிதம். தைவம், நிதி, நியாயம், தத்துவம், தேவவித்தை, பிரமவித்தை, பூதவித்தை, க்ஷத்திரவித்தை, நட்சத்திரவித்தை, சர்ப்பசாஸதிரம், நட்சத்திரநூல், தேவஜனநூல் முதலியவைகளைப் படித்துள்ளேன். ஆனால் நான் பிரமத்தை அறியாமல் தவிக்கிறேன். நீங்கள் தயவு செய்து பிரமத்தை அறிவிக்கவும்.

ச:—நீ படித்ததெல்லாம் வெறும் (நாமங்களே) பெயரே யாகும். ருக், யஜுர் முதலியவைகளெல்லாம் வெறும் நாமங்களே. நாமங்களை பிரமமென உபாசிப்பவன் ரத கஜ துரகாதிகளைக்கண்டு அரசன் என எண்ணுபவன் போலாவான்-நாமத்தைத் தியானஞ்செய்யவும்.

நாமத்தைவிடப் பெரிய பொருளுண்டோ ?

ச:—மொழியே பெயரைவிடப் பெரியது. மொழியினாலே ருக்வேத முதலிய அறிவைப் பெறுகிறோம். மொழிகளால் சோதி, சகம், வாயு, வானம், சலம், அனல், தேவர், மனிதர், பசுக்கள், பட்சி, புற்கள், மரம், எல்லா மிருகங்கள், புழு, எரும்புகளையும், நன்மை புன்மை, சத்தியம் அசத்தியம், இன்பதுன்பங்களை அறிவோம். மொழியன்னியில் இவைகளில்லை. மொழிகளில் தியானஞ்செய்யவும்.

நாரதர் மொழிகளில் தியானஞ்செய்து, மொழி செல்லும்வரையே பிரமத்தை அறியமுடியுமென அறிந்து, மொழியைவிட மேன்மையானதுண்டோ என வினவினர் ?

ச:—மனதே மொழியைவிடச் சிறந்தது. மனமிருந்தால் படிப்பதற்கும், செயல்களைச் செய்வதற்கும் முடியும். மனத்தை பிரமமாக உபாசிக்கவும்.

நா:—நான் மனத்தை தியானஞ்செய்தேன். மனத்தைவிட மேன்மையானதுண்டோ ?

ச:—சங்கற்பமே மனத்தைவிடச் சிறந்தது. சங்கற்பமானலொழிய மனம் மலராது. பிறகு மனத்தினின்று மொழியும், நாமமும் தோன்றும். வானமும், நிலமும், வாயுவும், மழையும், சலமும், அனலும், சங்கற்பமடைந்ததேயாகும். வானம், புவி (சங்கற்பத்தால்) மழையும், மழையால் உணவு, பிராணன், மந்திரம், செயல், சகத்தின் சர்வமும் சங்கற்பங்

களாலாகும். இச்சங்கற்பத்தையே பிரமமென தியானஞ் செய்யவும்.

நா :—சங்கற்பத்தை விடச்சிறந்ததுண்டோ ?

ச :—சித்தமே சங்கற்பத்திலும் சிறந்தது. சித்தமில்லையேல் சங்கற்பமில்லை. ஒருவன்கற்றும் சித்தங்குறைந்தவனுனல் கசடன் எனவே சனங்கள் கூறுவார்கள். ஆதலால் சித்தத்தை பிரமம் என தியானஞ்செய்யயும்.

நா :—சித்தத்தை தியானஞ் செய்தேன். சித்தத்தில் பெரியது யாது ?

ச :—சித்தத்திலும் பெரியது தியானமாகும். பிரகிருதி பொருள்கள் எல்லாம் எப்பொழுதும் தியானத்திலாகும். சாதாரணசனங்கள் சண்டை சச்சரவிலிருக்குங்கால், அறிஞர்கள் தியானத்திலாகி தூய்மையான பொருள்களை அறிவார்கள். ஆதலால் தியானத்தை பிரமமென உபாசிக்கவும்.

நா :—தியானத்திற்கு தலைமையானதுண்டோ ?

விஞ்ஞானமே அனைத்திலும் பெரியதாகும். விஞ்ஞானமொன்றினலேயே எல்லாப்பொருளும் தெளிவாகும். ஆதலால் விக்ஞானத்தையே பிரமமென உபாசிக்கவும.

நா :—நான் விஞ்ஞான பிரமத்தை அறிந்தேன். அதற்கப்பாலென்ன ?

ச :—வன்மையே விக்ஞானத்தை விடப்பெரியது. வன்மையுள்ள ஒரு புருஷன் நூறு அறிஞர்களைக் கலங்கச்செய்வான். வன்மையுள்ளவன் வளர்வான். வளர்ந்து அறிஞனுமாவான், வன்மையினலேயே பூமி நிலையாய் நிற்கும். வானம், மலை. மடுவு, தேவர்கள், மனிதர்கள், பறவை, பட்சி முதலியவைகள் நிலையாவார்கள், ஆதலால் வன்மையை பிரமமென உபாசிக்கவும்.

நா :—நான் வன்மையை உபாசித்து வன்மை வடிவத்தைக்கண்டேன், அதற்கப்பால் அறிவிக்கவும் ?

ச :—உணவே வன்மையைவிடப் பெரியதாகும். பத்து நாள் புசிக்கவில்லையானல் புலன்கள் எல்லாம் மறையும். புலன்கள் சென்ருல் ஒன்றையும் அறியான், ஆதலால் உணவை பிரமமாக உபாசிக்கவும்.

நா :—உணவை பிரமமாக நான் உபாசித்து, உணவு முதலியவைகளை எல்லாம் பெற்றேன்.

ச :—உணவிற்குப் பிறகு சலமாகும். சலமே உணவிற்குக் காரணம். சலத்தில் சிறந்தது அனல். அனலே சலத்திற்குக் காரணமாகும். அனலிற்கு ஆதாரம் வானமாகும். வானத்தின் மூலம் நினைவாகும். நினைவின் நிலை ஆசையாகும். ஆசைக்கப்பால் பிராணனுகும். ஆதலால் பிராணனை பிரமமாக உபாசனை செய்யவும் என ஒவ்வொன்ருக அவருக்கு அனுபவமாக்கி சனத்குமாரர் சொன்னுர்.

ஏனெனில் பிராணனே ஆசையைவிடப் பெரியது. வண்டி சக்கரத்தின் கடையாணியைப் போலுள்ள பிராணனிலேயே, பெயரிலிருந்து ஆசை வரை சேர்க்கப்பட்டுள்ளது. தாய், தந்தை, சகோதரன், சகோதரி என்பதெல்லாம் பிராணனேயாகும். பிரமமும் பிராணனேயாகும். பிராணனன்னியில் இவைகளை ஒருவரும் கவனிக்கப்போவதில்லை. இப்பிராணனை அறிந்தவன் அத்வைதியாகும். அவனே பிரமத்தையுமறிவான். அவனை நாடுவதே பிரமத்தை அறியும்வழி என சொல்லிமுடித்தார். (சா. 7-1-15).

## 85. சத்தியவழி

சனத் குமாரர் நாரதரை நோக்கி மறுபடியும் அருளிய உபதேசம். சத்தியத்தை அறிந்தவரே சத்தியத்தைச் சொல்லுவார்கள். சத்தியத்தை அறியாதவன் இதைச்சொல்லப் போவதில்லை. சத்தியத்தைப் பார்ப்பவனே அதை அறிவான். சத்தியத்தில் சிரத்தை யிருந்தாலொழிய அதை அறிய முடியாது. சிரத்தையிலே சாய குருநாதர் வேண்டும். கடமைகளைச் செய்தாலொழிய, குருவைக் காணமுடியாது. ஆனந்தமொன்றே கடமையைச் செய்ய உதவியளிக்கும்.

அகண்டமான அற்புதனை அறியவும் அகண்டப் பொருளை அறிய அவனைத் தவிரவேறு எதையும் காணலாகாது, கேட்கலாகாது. அது அமுதமாகும்.

அதற்காதாரமெது?

அதன் அகண்டமே அதற்காதாரம்.—இல்லை, அதற்கப் பாலுமாகும். (சா. 7. —16—22.)

## 86. ஐசுவரியம்

நாரதர்—பிரமத்தை அறிவதனாலுண்டாகும் லாபமென்ன?

ச:—பிரமமான ஆத்மாவை அறிபவன் தன்னிலே திவ்யமான திருப்தியை யடைவான். திருப்தியை யடைந்து, தானே சுவர்கமாகி, எல்லா உலகங்களுக்கும் தலைவனாகவும், அரசனாகவுமாவான். அந்த ஆன்மாவை அன்னியப் பொருளாக ஒருவன் எண்ணினால், எப்பொழுதும் விபத்திற்குள்ளாகி அன்னியர்களால் அரசு புரியப்படுவான்.

அது எப்படி? பிரமத்தைக்கண்டு, கேட்டு அறிபவனுக்கு ஆன்மாவினின்று பிராணன் தோன்றி, பிராணத்தினின்று ஆசை, ஆசையினின்று நினைவு, நினைவினின்று வானம், அனல், சலம், முதலியவைகள் தோன்றி, பிறகு உணவு, பலம், அறிவு, தியானம், சிந்தனை, சக்கற்பம், மனம், மொழி, நாமங்கள் முதலியவைகள் தோன்றும். இவைகள் தோன்றுவதால் ஒருவன் சுகம், துக்கத்திற் கஞ்சுவதில்லை. சுக துக்கத்திற் கஞ்சாதவன் மரணத்தையும் லட்சியஞ் செய்வதில்லை. மரணத்தை லட்சியஞ் செய்யாதவன் என் அரசனாகமாட்டான். இன்னமொரு வார்த்தை. இந்த வன்மையினால் இவ்வுலகத்திலுள்ள எல்லாப் பொருளாவான். எல்லாப் பொருள்களுமாகி அவன் அரசு செய்யமுடியாத பொருளே இல்லை. இவைகளுக்கெல்லாம் அடிப்படையானது ஏதேனுமுண்டோ?

நாரதரே! உண்டு. சங்கற்பம் அல்லது நிலையான நினைவே ஒருவனுக்கு அனைத்தையுமளிக்கும். அதனால் செய்ய முடியாதசெயலே இல்லை. நான் தான் ஆன்மா என்னும் எண்ணத்திலே ஒருவன் திடமாய்த் தோய்ந்து விட்டால், அனைத்திற்கும் அடிப்படையான இச்சங்கற்பம் எல்லாவிபத்துக்களி னின்று இவனை நீக்கும்.

நான் பிடிவாதமான நினைவுடனிருக்க விரும்புகிறேன். ஆனால் எனக்கு அதற்கேற்ற வழிபுரிய வில்லையே என நாரதர் மறுமடியும் வினவினர். அதற்கு சனத்குமாரர், நாரதரிடமிருந்த குற்றங் குறைகளை எல்லாம் காண்பித்து, மனோவாக்குக் காய சுத்தியானால் அது தானாகவே தோன்றும் என அறிவித்ததும் நாரதர் வணங்கி உண்மையை யறிந்தார்.

(சா. 7—26.)

## 87. சந்தேக நீக்கம்

சாந்தோக்ய சாமவேதரிஷியை அணுகி, சிறுவன் ஒருவன் அடியில்கண்டவாறு வினவி சந்தேகம் நீங்கினுன்.

வினு—பிரமபுரமான நமது இருதய கமலத்திலே ஒரு ஆகாசமுண்டாம். அதன் குணங்களை அறிவிக்கவும்? விடை—வெளியிலுள்ள ஆகாசத்தைப் போல், இருதயவானமும் விரிந்துள்ளது. அந்த ஆகாசத்திலே சுவர்கம், சுகம், அனல், காற்று, சூரியன், சந்திரன், மின்னல், நட்சத்திரம், உலகத்திலுள்ள அனைத்தும் அதில் இல்லாததும் அந்த ஆகாசத்திலுண்டு.

வினு—உள்ளத்திலுள்ள இவ்வாகாசத்திலே இவ்வனைத்தும் இருக்கு மானுல். தேகமழியுங்கால் இவ்வாகாசமும் அதிலுள்ள பிரமமும் பங்கமடைவதில்லையோ? விடை—தேகம் மூப்படைந்து அழிந்தால் இருதயத்திலுள்ள பிரமமும், ஆகாசமும் அழிவதில்லை. அதற்குப் பாவமில்லை. மூப்பு, சூன்யம் சாவுமில்லை. பசிதாகமோ பூஜ்யம். அதன் குணமென்ன? அந்த பிரமத்திற்கு இயல்பான சில விருப்பங்களுண்டு. அந்த குணமான உண்மை விருப்பத்தை அடைந்தால் உனக்கு எல்லா உலகங்களிலும் விடுதலை யுண்டு.

அந்த விருப்பங்கள் என்ன என்பதை நீங்கள் அறிவிப்பீர்களா?

அந்த விருப்பங்களைப்பற்றி நான் என்ன சொல்வேன். அது பொய் மூடியால் மூடப்பட்டதாகும். புதைந்த போக்கிஷத்தின்மேல் நடந்து அதை அறியாமல் தவிப்பது போல் உண்மையான விருப்பத்தின் பொய் கவசத்திலே, நாம் நின்று கொண்டு அதை அறியாமல் திண்டாடுகிறோம். இதை அறிவது கடினம். ஆனுல் பிரமபுரத்தில் எதுவுமிருப்பதால் ஒருவன் விரும்புவதை எல்லாமடைவான்.

விருப்பம் எனச் சொல்லுகிறீர்களே! மனிதர்கள் சாதாரணமாய் விரும்புவதையாவது சொல்லவும். அதை அடைவதெப்படி?

மனிதர்களிடமுள்ள சங்கற்பத்தால் தந்தை, தாய், தாரணி, நண்பன், கந்தம், உணவு, கானம், எந்தப்பொருளை நாடினாலும், சரி, அவைகளையே விருப்பம் எனச்சொல்வது. உண்மையான விருப்பம் எது எனச் சொல்லக்கூடாதோ?—சரி—அதையாறுரைத்தால் சத்தியமெனவே உரைக்கவேண்டும். சத் என்றால் அமுதன். தி என்றால் மரிப்பவன். யம் என்றால் இவைகளை அணைப்பவன். இதை அறிய முயலும் தாகத்தை விருப்பமென்ச் சொல்லலாம்.

இந்த சத்தியமெனப்படும் பிரமத்தை அடைவதெப்படி?

பிரமசரியத்தைவிட வேறு வழியில்லை. பிரம சரியத்தால் புவியில் விடுதலையாகலாம். பிரம சரியத்திற்கே யக்ஞமெனப் பெயராகும். யாகமென்பதும் பிரமசரியமே. மௌனநிலை, உபவாசம், ஆசிரம வாழ்க்கை என்பதெல்லாம் பிரம சரியத்தின் வேறு பெயர்கள். பிரமசரியத்தால் அடையாத பொருளேயில்லை. பிரம புரியில் புவியிலே பெருமையுடன் வாழவும், பிரம சரியத்தைவிட வேறுவழியேயில்லை.

மானிடர்களைப்பற்றி சில இரகசியங்களை அறிய விரும்புகிறேன்?

மனிதன் இருதயத்தை சூரியன் எனச் சொல்லலாம். சூரியனைப்போல் அங்கு பல நிறங்களைக்காணலாம். ஒரு பெரிய சாலை இரண்டு நகரங்களில் சேர்வதுபோல் சூரியனின் கிரணங்கள் நாடிகளிலும், நாடிகளினின்று தோன்றி சூரியனிலும் சேரும்.

நாடிகளில் சூரியன் எப்பொழுது செல்லுகிறான்?

ஒருவன் ஆனந்தமாய்த் தூங்கும்பொழுது ஒரு கனவையும் காண்பதில்லை. அப்பொழுது தான் சூரியன் நாடிகளில் சென்றிருப்பதாக அறியவும்.

அச்சூரியன் தேகத்திலிருக்கிறான் என்பதை எப்படி அறிவோம்?

ஒருவன் பெரிய நோயிலே அவஸ்தைப்படுங்கால் நான் யார் தெரியுமா? என நண்பர்கள் அவனை கேட்பார்கள். சூரியன் தேகத்தினின்று நீங்காதவரை நண்பர்களை யார் யார் எனச் சொல்லுவான். சூரியன் நீங்கிவிட்டாலோ யார் யார் என அவனால் சொல்லமுடியாது.

அவன் அப்பொழுது எங்கு செல்லுகிறான் என்பதை நீங்கள் சொல்லுவீர்களா?

மனம் தடுமாறி, நெஞ்சு கலங்கும் சமயத்திலே சூரியன் செல்லுகிறான் என அறியவும்.

தேகத்திலே அவன் செல்லும் வழி எது?

இச்சூரியனின் உண்மையை அறிந்தவர்கள் தங்களின் செயலின் சிறப்பால் தலைவழியாய்ச் செல்லுவார்கள். மற்றவர்களின் சூரியன் வேறு வழியாய்ச் செல்லும். (சா. 8-1-6.)

## 88. இந்திரன் விரோசனன்

நாம் ஆத்மாவை நாடி அறிந்துகொள்ளவேண்டும். ஏனெனில் அது பாவம்மூப்பினின்று பிரிந்தது. அதற்குப் பசிதாகமில்லை. அது அவசியமான விருப்பம், அந்த எண்ணத்தைத் தவிர வேறு எதையும் நாடுவதில்லை. அதை அறிந்தவன் எல்லா விருப்பம் உலகங்களைப்பெறுவான் என தேவர்களின் தலைவனான இந்திரனும், அசுரர்களின் அரசனான விரோசனும்.

பிரஜாபதியை அணுகி 32 வருஷம் வணக்கமுடன் சேவை புரிந்தார்கள். அப்பால் பிரஜாபதி அவர்களை நோக்கி, நீங்கள் என் இங்குவர வேண்டுமென்றார். நாங்கள் ஆன்மாவைப்பற்றி. அறிய உங்களை நாடினோம் என வணங்கினார்கள். கண்களில் காண்பவனே அந்த ஆன்மாவாகும். அது அச்சமற்றது. அமுதமாகும். அதுவே பிரமமாகும்.

சலத்திலும், கண்ணாடியிலும் புலனாகும் வடிவம் எது என அவர்கள் மறுபடியும் வினவினார்கள். எங்கும் புலனாகும் பொருள் அவனே எனக்கூறி, சலபாண்டம் ஒன்றைக்காண் பித்துநீங்கள் நன்றாய் நோக்கிப் பிறகு என்னிடம் வரவும் என் றார். நாங்கள் சலத்தை நோக்கினோம். எங்கள் ரோமம் நகத்துட னான எங்கள் வடிவத்தைக்கண்டோம். ஆடை ஆபரணங்களு டன் அலங்காரமாயுள்ள எங்களைப்போலவே ஒரு வடிவத் தைக்கண்டோம் எனக்கூறியதும், அதுவே அச்சமற்ற ஆன்மா, அதுவே பிரமம் என்றார். இருவர்களும் திருப்தியாகி சென்று விட்டார்கள்.

விரோசனன் திருப்தியாகி அசுரர்களிடஞ்சென்று ஆன்மா என்பது இத்தேகமேயாகும். அதையே நாடி நாம் உபாசிக்கவேண்டும். அதனால் இகபரமேன்மையை அடை யலாமெனக்கூறி, உண்டு, உறங்கி, உல்லாசமாகி நாசமாகும் வழியை நாடினான்.

இந்திரன் சற்று தூரஞ்சென்று, சந்தேகமாகி மறுபடி யும் பிரஜாபதியை நாடி, நீங்கள் புலனாக்கிய ஆன்மா தேகமே யாகும். தேகம் அழகாய்த் தோன்றினால் அதுவும் அப்படியே தோன்றுகிறது. நான் குருடன், நொண்டியானால் நான பார்க் கும் வடிவமும் அப்படியே புலனாகும். ஒருவேளை தேகமழிந் தால் அதுவும் அழியலாம். ஆதலால் இந்த சிட்சையால் எனக் கென்ன லாபம். உண்மையான ஆன்மாவை எனக்கு அறிவிக் கவும் என இந்திரன் விரும்பினான்.

பிறகு இந்திரன் அவருடன் 32 வருடம் வசித்தான். அப்பால் பிரஜாபதியானவன் கனவிலே இங்குமங்கும் களிப்புடன் சென்று, அச்சமன்றியில் அமுதமாயுள்ள ஆன்மாவே பிரமம் என்றார். இந்திரன் திருப்தியாகி தனது நிலயம் செல்வதற்குள், சந்தேகமுடனாகி மறுபடியும் பிரஜாபதியை யணுகி வினவியதாவது:— பெரியாரே! நான் நொண்டியானாலும், குருடனானாலும் கனவிலே எனது வடிவத்தில் பங்கத்தைப் பார்ப்பதில்லை யாதலால், நீங்கள் சொல்லியதை உண்மையென்றே அறிந்தேன். ஆனால் கனவிலே சுகதுக்கமுண்டு. அப்பொழுது கனவு பங்கமாகி, என் வடிவத்தைத் துரத்துவதுபோல் காண்கிறேன், இந்த ஆன்மாவினால் எனக்கென்ன ஆதாயம்?

மறுபடியும் 32 வருடகாலம் இந்திரன் பிரஜாபதியுடன் வசித்ததில், கனவில்லாத உறக்க நிலையிலே அவனைக் காணலாமென்றார். இந்திரன் சற்று திருப்தியாகி, பிறகு சந்தேகத்தில் தோய்ந்து பிரஜாபதியை யணுகி, தூக்கத்தில் என்னைப்பற்றியே நான் அறிவதில்லை. உலகத்திலுள்ள எதையும் நான் அறிவதில்லை. இதை நான் அழிவு எனவே நினைப்பதால் இவ்வான்மாவினால் பயனென்ன? என வினவினர்.

என்னுடன் ஐந்து வருடம் வசிக்கவும். பிறகு அறிவிப்பேன் என்றார்.

ஐந்து வருடம் சென்றதும் பிரஜாபதிகூறியதாவது:— தேகம் மரணத்தால் பற்றியுள்ள ஒரு அநித்தியப் பொருளாகும் அமுதமான ஆன்மாவிற்கு தெகமில்லை. தேகத்திலிருக்கும் வரை, அவனைத்தனிமைபாக எண்ணுதவரை அவனுக்கும் சுகதுக்கமுண்டு. காற்று, மேகம், மின்னல் வானம் பிரிந்து பெருஞ் சோதியிலே தங்கள் சுயரூபத்துடன் சாய்வதுபோல் ஆன்மாவின் அமுத சோதியைக்கண்டவன் தேகத்தால் எத்

தனே சுகதுக்கங்களை அனுபவித்த போதிலும், அவைகளில் பற்றும், பசையுமில்லாமல் தன் செயல்களைச் செய்தவண்ணமாயுள்ளான். இவனே உத்தம புருஷனுவன்,

இத்தேகத்திற்கு பிராணன் குதிரை போலாகும், நா, கண், காது, மூக்கு அவ்வான்மாவிற்குப் பல கருவிகளாகும், மனம் எனபதே தெய்வீகக் கண்ணுகும்,

இவ்வான்மாவை அறிபவர்கள். இகபரத்திற்கு அதிபதியாவார்கள். (சா. 8. 7-12)

## 89. உபாசனை

உபநிஷத உபாசனை மந்திரங்கள் சொல்லவேண்டுமென விரும்பியதற்கு ரிஷி அவர்கள் அருள் புரிந்ததாவது :—

ஓம், அது பூர்ணமாகும், இதுவும் பூர்ணமே. பூர்ணத்தினின்றே பூர்ணம் புலனுகும். பூர்ணத்தினின்று பூர்ணத்தைப் பிரித்தால் மிகுதியாயிருப்பது பூரணமாகும்.

பொன்மயமான பாத்திரத்தால் சத்தியமுகம் மூடப்பட்டுள்ளது. சத்திய திருஷ்டியுள்ளவன் அதைக்காண நீ அதைத் திறக்கவும்.

உபநிஷத பிரமம் என்னுடைய அங்கங்களை யெல்லாம் வாக்கு பிராணன் கண் காது முதலியவைகளை யெல்லாம் பலமுடன் செய்யவேண்டும். பிரமம் என்னிடமிருந்து பிரியலாகாது, நான் பிரமத்தினின்று பிரிய வெண்டாம். எனக்குப் பிரிவு என்பதில்லை. ஆத்மாவிலேயே ஆனந்தத்தை நாடும் என்னில் உபநிஷத்தின் எல்லா தர்மங்களும் தோயவேண்டும். என்னிடத்தில் அவைகள் அணையவேண்டும்.

பரஸ்பரம் பாதுகாப்புடனுவோம். பரஸ்பரம் பிரிய

முடனுவோம். எமது வன்மையைப் பெருக்குவோம். கல்வியிலே திறமையுடனுவோம். பரஸ்பரம் துவேஷமன்னியிலாவோம்.

நன்மைகளை எல்லாம் எமது செவியால் செவியுறவேண்டும். திவ்யமானவைகளை எல்லாம் எமது கண்களால் காணவேண்டும். இந்த புலனுன வன்மைகளால் அளிக்கப்படும் நாள்களையெல்லாம் நிலையான அங்கங்களுடன் துதிசெய்து அனுபவிக்க வேண்டும். மூத்தவனுன இந்திரன் எமக்கு நமக்கு நன்மையை யளிக்கவும். அனைத்தையுமறியும் போஷிப்பவனும் எமக்கு நன்மையை அளிக்க வேண்டும். ஓயாத சக்கரமுள்ள சூரியனும் பிரகஸ்பதியும் எமக்கு நன்மையை யளிக்கட்டும்.

மித்திரன், வருணன், அர்யமான், இந்திரன், பிரஹஸ்பதி, நீண்டவிஷ்ணுவும் எமக்கு நன்மையை அளிக்கட்டும். பிரமனே, வாயுவே உங்களுக்கு நமஸ்தே. பிரத்தியட்சபிரமமான உன்னையே புலனுகும் பொருளாக போற்றுவேன். இயல்பையே நாடுவேன். சத்தியத்தையே சொல்லுவேன். என்னையும் மற்றவர்களையும் அதுவே காக்கும்.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

---

THE KABEER PRINTING WORKS, Triplicane, Madras.

## ஜம்புநாதர் தமிழ் நூல்கள்

—:o:—

| | | | | |
|---|---|---|---|---|
| கடோபநிஷதம் | ... ... | 0 | 8 | 0 |
| யோகாசனம் | ... ... | 1 | 0 | 0 |
| ராமதீர்த்தர் | ... ... | 0 | 12 | 0 |
| மாஜினி கடமைகள் | ... | 2 | 0 | 0 |
| குலிஸ்தான் | ... ... | 0 | 8 | 0 |
| சிவவேதம் | ... ... | 0 | 12 | 0 |
| திரிமூர்த்தி உண்மை | ... | 0 | 12 | 0 |

ஜம்புநாதன் புஸ்தகசாலை
14, பள்ளியப்பன் தெரு,
சாவுகார்பேட்டை, சென்னை.

# ஆசிரியர் ஜம்புநாதரி

# தமிழ் நூல்கள்.



| | | | | |
|---|---|---|---|---|
| கடோபநிஷதம் | ... | 0 | 8 | 0 |
| யோகாசனம் | ... | 1 | 0 | 0 |
| உபநிஷதக் கதைகள் | ... | 1 | 8 | 0 |
| மௌனவேதம் | ... | 0 | 12 | 0 |
| குலிஸ்தான் | ... | 0 | 8 | 0 |
| திரிமூர்த்தி உண்மை | ... | 0 | 12 | 0 |
| மாஜினி சரித்திரமும் மனிதர் கடமைகளும் | ... | 2 | 0 | 0 |
| சிரத்தானந்தர் சரித்திரம் | ... | 0 | 12 | 0 |

---

கிடைக்குமிடங்கள் :—

1. ஜம்புநாதன் புஸ்தகசாலை,
   சாவுகார்பேட்டை, சென்னை.
2. சுதேசமித்திரன் புஸ்தகசாலை,
   ராயப்பேட்டை, சென்னை.
3. தமிழ்நாடு புஸ்தகசாலை,
   ஜார்ஜ்டவுன், சென்னை.
4. இ. மா. கோபாலகிருஷ்ணகோன்,
   கோபால் மஹால், மதுரை.